# கல்கி

KALKI
24.12.89
ரூ. 2.50



# தேவிலால்:

## துணையா? தலைவலியா?


POND'S
Sandal Talc
POND'S Sandal Talc

●● உத்தரப் பிரதேசத்தில் வசதிமிக்க ராஜ குடும்பத்தில் பிறந்தவர், சிங். அவ்வளவு வசதியில்லாத மற்றொரு ராஜ குடும்பத்தில் தத்து எடுத்துக் கொள்ளப் பட்டார்.

●● வினோபா பவேயின் பூதான இயக்கத்தால் கவரப்பட்டதால் தமக்கிருந்த நிலங்கள் முழுவதையும் வினோபாவிடம் ஒப்படைத்து விட்டார். தானம் செய்த பிறகு தான் தமது குடும்பத்தினருக்குத் தெரிவித்தார்!

●● பாபா அணு ஆராய்ச்சி நிலையத்தில் விஞ்ஞானியாகப் பணியாற்ற வேண்டும் என்பது வி. பி. சிங்கின் விருப்பம். அணு விஞ்ஞானத்திலிருந்து அவரைத் திசை திருப்பியவர் அவருடைய ஆசிரியர் விஜய சங்கர் மிச்ரா. பொருளாதாரம் அல்லது சட்டம் படிக்குமாறு தூண்டினார்.

●● அரசியலில் சிங்கை இழுத்தவர் எச். என். பகுகுணா. காங்கிரஸில் சேர்ந்து பல வெற்றிகளைப் பெற்று, உ. பி. சட்டசபையிலும் டில்லி நாடாளுமன்றத்திலும் அடுத்தடுத்து இடம் பெற்றார்.

●● இவர் வளர்ச்சிக்கு உதவியவர்களுள் சஞ்சய் காந்தியும் ஒருவர். அதனால் உ. பி. முதல்வரானார். மோர்தாபாத்திலும்



# ஒரு ராஜா, மந்திரியாகிறார்!

அலிகாரிலும் நடந்த மதக் கலவரங்களுக்குத் தார்மிகப் பொறுப்பேற்று ராஜினாமா செய்தார். இந்திரா காந்தி பாராட்டிய போதிலும் ராஜினாமாவை ஏற்கவில்லை! இரண்டு ஆண்டுகள் சென்று கொள்ளைக்காரர்கள், பத்து யாதவர்களையும் ஆறு ஹரிஜனங்களையும் கிராமங்களில் கொன்ற போது, மக்களுக்குப் பாதுகாப்புத் தரத் தவறியதற்குப் பொறுப்பேற்று மீண்டும் ராஜினாமா செய்தார். இம்முறை அது ஏற்கப்பட்டது.

●● இந்திரா காந்தி சில காலம் சென்று அவரை மத்தியில் வர்த்தக அமைச்சராக்கினார்.

●● ராஜீவ் காந்தி பதவிக்கு வந்ததும் நிதி மந்திரியானார். தொழில் துறை வளர்ச்சிக்குப் பல சலுகைகளை அளித்தாலும் பொருளாதாரக் குற்றங்களைப் பொறுத்துக் கொள்ளாமல் பெரிய, பெரிய தொழிலதிபர்கள் மீதும் நடவடிக்கைகள் எடுத்தார். 'சட்டம் அனைவருக்கும் பொது' என்றார்.

●● ராஜீவ் தர்மசங்கடத்துக்கு உள்ளாகி அவரை பாதுகாப்புத் துறைக்கு மாற்ற, அங்கும் நீர்மூழ்கி பேர ஊழலைக் குடைய ஆரம்பித்தார். ராஜினாமாவில் முடிந்தது.

●● ஃபேர்ஃபேக்ஸ் விவகாரம், அமிதாப் பச்சன் விவகாரம் எல்லாம் சேர, காங்கிரஸிலிருந்து வெளியேற்றப்பட்டு, ஜன் மோர்ச்சா ஆரம்பித்து, ஜனதா தளத்துடன் இணைந்து, தேர்தலில் காங்கிரஸை முறியடித்து, இன்று பிரதமராக விளங்குகிறார்.

●● சஞ்சய் காந்தி இவரை உ. பி. முதல்வராக்க முயன்ற போது, "எனக்குத் திறமை போதாது" என்றவர் வி. பி. சிங். "பிரதமர் பதவியில் ஆசையில்லை" என்றும் தேர்தல் சமயத்தில் கூறி வந்தார். "வேண்டாம், வேண்டாம், எனக்கு ஆசை இல்லை" என்று கூறியபடியே நாட்டின் மிக உயர்ந்த பதவியை எட்டிப் பிடித்தவர் உலகிலேயே வி. பி. சிங் ஒருவராகத்தான் இருக்க முடியும்!

ஆதாரம்: **ஸண்டே**

# தேவிலால்: துணையா? தலைவலியா?

தேசிய முன்னணி அரசு பதவி ஏற்றதும் நமக்கு ஏற்பட்ட பெரிய அதிர்ச்சி, கருணாநிதி வீட்டுக் கல்யாணத்துக்குத் துணைப் பிரதமர் தேவிலால் ஸ்பெஷல் விமானத்தில் சென்னை வந்து இறங்கியது தான். "அடக்கடவுளே! பதவி ஏற்ற மறு நாளே இப்படி மக்களின் வரிப் பணத்தை விரயம் செய்ய ஆரம்பித்து விட்டாரே, இனி போகப் போக என்னதான் செய்ய மாட்டார்!" என்று அங்கலாய்த்தோம். முன்பு ராஜீவ் காந்தி லக்ஷத் தீவுகளில் விடுமுறை கொண்டாடிய போது, திருவனந்தபுரத்திலிருந்து பால்பாயசம் விமானத்தில் பறந்ததைக் கேலி செய்தவர்கள், இப்போது வாயடைத்துப் போனார்கள்! தேவிலால் தந்த அதிர்ச்சி இத்துடன் முடிந்து போகவில்லை. "இங்கு எல்லாருமே பிரதம மந்திரிகள்தான்!" என்று ஒரு தடவைக்கு இரண்டு தடவையாக டில்லியிலும், சென்னையிலும் கூற, அது பத்திரிகைகளில் வெளியாகி பிரமிப்பையும் குழப்பத்தையும் கூட உருவாக்கியது. 'இதோடு போயிற்றா' என்றால் இல்லை! எந்தப் பரம்பரை ஆட்சியை தேர்தல் பிரசாரங்களின் போதும் அதற்கு முன்னதாகவும் தேசிய முன்னணி வன்மையாகத் தாக்கி வந்ததோ, அதே பரம்பரை ஆட்சி ஹரியானாவில் நிலைபெறச் செய்தார் தேவிலால்! தமது மகனை முதல்வராக்கினார்! இதற்காக ஆளுனரை இங்குமங்குமாக அல்லாடச் செய்தார்!

இந்த நிகழ்ச்சிகளே தேவிலாலின் குண இயல்புகளை அடிக் கோடிட்டுக் காட்டுகின்றன. தாம் ஒன்றை நினைத்து விட்டால் அதை நிறைவேற்றியே ஆக வேண்டும் என்ற பிடிவாதம்; அதற்காகக் கையாளப்படும் வழி முறைகளைப் பற்றி கவலைப்படாத முரட்டுத் தன்மை; மனத்தில் என்ன தோன்றுகிறதோ அதை, பின் விளைவுகள் பற்றிச் சற்றும் யோசியாமல் பேசி விடுகிற அவசரம்!

'நல்லவேளை இந்த மனுஷன் பிரதமராக வில்லை. பிரதமராகியிருந்தால் எப்படி இவரை இந்த நாடும் உலக நாடுகள் பலவும் தாக்குப்பிடிக்க முடியும்?' என்று பலர் எண்ணினார்கள்.

அந்த "நல்லவேளை"யில் உள்ளடங்கியிருந்த ஒரு விஷயம்தான் தேவிலாலுடைய பிளஸ் பாயிண்ட்! அது, தமது சுபாவத்தில் உள்ள சில தன்மைகள் பிரதமர் பதவிக்கு ஒத்து வராது என்பதை அவரே உணர்ந்திருந்ததுதான்! அதனால்தான் அவர், "என்னை விடச் சிறந்த ஒருவருக்கு எனக்கு அளிக்கப்பட்டுள்ள இந்தப் பதவியை வழங்குகிறேன்" என்று பெருந்தன்மையுடன் கூறி விலகிக் கொண்டார்.

ஒரு நாட்டின் பிரதமராக விளங்க அரசியல் அனுபவமும் அறிவாற்றலும் மட்டும் இருந்தால் போதாது. பெருவாரியான மக்களைக் கவர்கின்ற தோற்றம், இயல்பு; அயல்நாட்டுத் தலைவர்களுடன் பழகுவதற்கு ஏற்ற பண்பாடு; கருத்து மாறுபடும் இதர கட்சித் தலைவர்களையும் முகம் கோணாமல் அணைத்துக் கொண்டு போகிற சுபாவம் முதலிய பல அம்சங்கள் தேவை. ஆயிரம் வார்த்தைகளால் சாதிக்க முடியாத ஒரு விஷயத்தை ஒரு புன்னகை சாதித்து விடக்கூடும். இவையெல்லாம் தம்மிடமில்லை என்பதை உணர்ந்திருந்ததால்தான் தேவிலால் பிரதமர் பதவியை விட்டுக் கொடுத்து, அதற்குப் பதிலாக துணைப் பிரதமர் பதவியைப் பெற்றுக் கொண்டார்.

ஆனால் இப்போது பிரச்னை என்னவென்றால், 'துணைப் பிரதமர் பதவி என்பதை தேவிலால் ஒரு அலங்காரத் தொடராக மட்டும் கருதி, விவசாய அமைச்சர் என்ற அளவில் மற்ற அமைச்சர்களுள் ஒருவராக அடங்கி நடப்பாரா; அல்லது, துணைப் பிரதமர் என்ற தகுதிக்கு ஏற்ப செல்வாக்கையும் அதிகாரத்தையும் பிரயோகித்துத் தம்மை உயர்த்திக் கொண்டு மற்றவர்களை ஆட்டிப் படைக்க முற்படுவாரா' என்பதுதான். துணைப் பிரதமர் என்ற தகுதிக்கு ஏற்ப அவர் அதிகாரம் பண்ண ஆரம்பித்தால் நிச்சயமாக அது வி.



• பிரதமருக்கும் துணைப் பிரதமருக்கும் இடையே பாலமாக விளங்கி...

பி. சிங்குக்குத் தலைவலியாக உருவெடுக்கும். அதற்குக் காரணம், தேவிலாலின் சுபாவத்திலேயே உள்ளடங்கியிருக்கிறது. 'இரண்டு எஜமானர்களிடம் நம்மால் பணியாற்ற முடியாதுடாப்பா' என்று இதர அமைச்சர்களும் அதிகாரிகளும் அங்கலாய்க்க நேரிடும்.

**து**ணைப் பிரதமர் பதவி என்பது இந்திய ஜனநாயகத்துக்குப் புதிய தத்துவம் அல்ல. பாரதம் சுதந்திரம் பெற்றதும் அமைந்த முதல் மந்திரி சபையிலேயே துணைப் பிரதமர் இருந்திருக்கிறார். அவர் 'இரும்பு மனிதர்' என்று போற்றப்பட்ட சர்தார் வல்லபபாய் பட்டேல். நேரு, பட்டேல் ஆகிய இருவருமே காந்திஜியின் அத்தியந்த சீடர்கள்தாம். ஆனால் குண இயல்புகளில், அணுகுமுறைகளில் இருவருக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம். இருவருமே சுதந்திரப் போராட்ட காலத்தில் சமமான முக்கியத்துவம் பெற்றிருந்ததால் சுதந்திர ஆட்சி அமைந்த போது பட்டேலுக்கு முதலிடம் இல்லாவிட்டாலும் இரண்டாமிடமாவது தராமல் இருக்க முடியவில்லை. பிரதமர் நேருவுக்கும், துணைப் பிரதமர் பட்டேலுக்கும் இடையில் சுமுகமான நல்லுறவு சில காலம் மட்டுமே நீடித்தது. அதன் பிறகு அடிக்கடி கருத்து வேற்றுமைகள் முளைக்க ஆரம்பித்தன. 'யார் பெரியவன்?' என்பது போல் அவர்கள் ஒருவரை ஒருவர் கேட்டுக் கொள்ளாவிட்டாலும் அவர்கள் நடத்தையில் அந்தக் கேள்வி தொக்கி நிற்பதை அனைவராலும் உணர முடிந்தது!

அந்தச் சமயத்தில் அதிர்ஷ்டவசமாக ராஜாஜி கவர்னர் ஜெனரலாக இருந்தார். அவர், இரண்டு பேருக்கும் இடையில் பாலமாக அமைந்து, கருத்து வேற்றுமைகளைச் சரிசெய்து ஒருவரை ஒருவர் அனுசரித்துப் போகத் துணை நின்றார். ராஜாஜி மட்டும் இல்லாதிருந்தால் ஒரு பெரிய நெருக்கடி அமைச்சரவையில் அன்று தோன்றியிருக்கும் என்பது உறுதி.

**அ**ந்தக் காலகட்டம் நினைவில் இருப்பவர்களுக்கு இப்போது ஏறத்தாழ அதே மாதிரியான ஒரு நிலைமை தோன்றியிருப்பது புரிகிறது. 'மத்திய அமைச்சரவையில் மீண்டும் கௌரவப் பிரச்னைகள் தோன்றி, பிரதமருக்கும் துணைப்பிரதமருக்கும் இடையே மோதலில் முடியக் கூடாதே' என்று கவலையாக இருக்கிறது. 'அப்படி மோதல் ஏற்பட்டால் இருவரையும் அரவணைத்து, ஆறுதல் சொல்லி, மனத்தில் காயம் படாமலும் நாட்டுக்குச் சேதம் உண்டாகாமலும் காப்பாற்ற, ராஜாஜி போல் இன்று டில்லியில் யார் இருக்கிறார்கள்? அப்படி யாராவது ஒருவர் உருவாக வாய்ப்பு உண்டா?' என்ற கேள்விகள் எழுகின்றன.

தேவிலாலின் சுபாவத்தைப் பார்க்கும் போது, இத்தகைய மோதல்கள் ஏற்படாது



* பதவிப் பிரமாணம் ஏற்கும் போதும் பிடிவாதம்!

என்று உறுதியாக நம்பிக் கொண்டிருக்கவும் நம்மால் முடியவில்லை. தேவிலாலின் குண இயல்புகள் உடன்பிறந்தவை மட்டுமல்ல; அவர் வாழ்க்கை அமைந்த விதத்தால் உருவானவையும் கூட.

தேவிலால் எளிமையானவர் என்றாலும் ஏழைமையான குடும்பத்தில் பிறந்தவர் அல்ல. இவர் தந்தைக்கு 4,500 ஏக்கர் நிலம் சொந்தமாக இருந்தது! சிறு வயதில் தாயை இழந்தார். தந்தை மறுமணம் செய்து கொண்டதால் இவர் கவனிப்பாரற்ற குழந்தையாக வளர்ந்தார்.

இதனால் ஏற்பட்ட மனக் கசப்புத் தானோ என்னவோ, அவருக்கு குஸ்தி விளையாட்டில் ஈடுபாடு ஏற்பட்டது! குஸ்தி வீரராகவே விளங்கினார். லாலா லஜபதி ராய் கொலை செய்யப்பட்ட அதிர்ச்சிதான் இவர் சுதந்திரப் போராட்டத்தில் குதிக்கத் தூண்டுகோலாக இருந்தது. பள்ளிப் படிப்பை ஒன்பதாவது வகுப்போடு நிறுத்தி விட்டு, போராட்டக் களத்தில் குதிக்கின்ற தம் மகனை, எப்படி திசை திருப்புவது என்று யோசித்த இவர் தகப்பனார், 'ஒரு கல்யாணத்தைப் பண்ணி வைத்து விட்டால் திருந்தி விடுவான்' என்று தீர்மானித்து, அவ்வாறே செய்தார்! பதினைந்தே வயதான தேவிலாலுக்கு பதினாறு வயதான ஹர்கி தேவி மனைவியானார்!

தகப்பனார் எதிர்பார்த்தது போல் ஒன்றும் நடக்கவில்லை. தேவிலால் தொடர்ந்து சுதந்திரப் போராட்டங்களிலும் சமுதாயச் சீர்திருத்த இயக்கங்களிலும் கலந்து கொள்ளவே, பள்ளியிலிருந்து நீக்கப்பட்டார்! இதை அவர் தம் தந்தையிடம் கூடத் தெரிவிக்கவில்லை! அமிர்தசரஸில் நடந்த பண்டித மதன்மோகன் மாளவியாவின் பொதுக் கூட்டத்துக்கு டிக்கெட் இல்லாப் பயணியாக ரயிலேறி விட்டார்!

1936ல் நடந்த சட்டசபைத் தேர்தலின் போது இவர் பஞ்சாபில் ஆத்மராம் என்பவருக்காக ஒரு தொகுதியில் உழைத்தார். அப்போது இவரது முரட்டுச் சுபாவம்

வெளிப்பட்டு, 'எதிர்க் கட்சியைச் சேர்ந்த நந்த்ராமின் ஆட்களை அடித்து நொறுக்கியதோடு, அவசரத்தில் சில வாக்காளர்களையும் தாக்கி விட்டார்! நிகர விளைவு, இவர் ஆதரவு பெற்ற ஆத்மராம் வெற்றி பெற்றபோதிலும் அது செல்லாததாகி விட்டது! ஆயினும் தேவிலாலின் அரசியல் பிரவேசத்துக்கு இந்த நிகழ்ச்சியே வித்திட்டது!

**அ**ந்த வித்து முளைவிட்டுச் செழித்து வளர, 52ல் எம்.எல்.ஏ. ஆனார் தேவிலால். 57லும் வெற்றி பெற்றார். 62ல் காங்கிரஸிலிருந்து விலகி சுயேச்சையாகப் போட்டியிட்டு வென்றார். பஞ்சாப் — ஹரியானா பிரிவினைக்குக் குரல் கொடுத்தார். 66ல் ஹரியானா மாநிலம் பிரிந்த போது மீண்டும் காங்கிரஸுக்கே திரும்பினார். மறுபடி 71ல் காங்கிரஸிலிருந்து பிரிந்தார். பன்ஸிலால், பஜன்லால் இருவரையும் ஒரே சமயத்தில் போட்டியிட்டு வென்றார்! ஒருவழியாக 79ல் ஹரியானா முதல்வரானார்.

'ஆயாராம் கயாராம்' அரசியல் நடத்திய தேவிலாலை, அவருடைய ஆயுதம் கொண்டே கவிழ்த்தது காங்கிரஸ்! மேலும் பல போராட்டங்களுக்குப் பிறகு 87ல் மறுபடி முதல்வரானார் தேவிலால். தமது தேர்தல் அறிக்கையில் அளித்திருந்த வாக்குறுதிப்படி விவசாயிகளுக்கான அனைத்துக் கடன்களையும் ரத்து செய்து, அவர்களிடம் நல்ல பெயர் சம்பாதித்துக் கொண்ட தேவிலால், கூடவே, தமது மகன்கள், மருமகன்கள் என்று ஏராளமான சொந்தக்காரர்களுக்கு அரசாங்கப் பதவிகளைக் கொடுத்துப் பலரது பொறாமையையும் பகைமையையும் சம்பாதித்துக் கொண்டார்! கடைசியில் தமது மகனையே அரியானா முதல்வராகவும் ஆக்கி விட்டார். ''சுற்றி வளைத்துப் பார்த்தால் ஹரியானாவில் உள்ள எல்லாருமே எனக்குச் சொந்தக்காரர்களாகத்தான் இருப்பார்கள்; எனக்கு நம்பிக்கையானவர்களை வைத்துத்தான் நான் அரசு நடத்த முடியும்'' என்பது அவர் கூறும் சமாதானம்!

**தே**விலாலுக்கு நான்கு மகன்கள். ஒரு மகள். நான்கு புதல்வர்களில் இருவர் அரியானா மந்திரி சபையில் இடம் பெற்றிருக்க, ஒருவர் குடும்பச் சொத்துக்களைப் பராமரிக்கிறார். அம் மாநிலத்தில் அரசு சம்பந்தப்பட்ட முப்பத்தி நாலு வாரியங்களில் தேவிலாலின் சொந்தக்காரர்கள்தாம் உயர் பொறுப்புக்களில் இருக்கிறார்கள்!

87க்குப் பிறகு 'மத்தியில் பெரிய ஆளாக வர வேண்டும்' என்ற நோக்கத்தில், சொந்த மாநிலத்தை அதிகமாகக் கண்டுகொள்ளாமல் விட்ட தேவிலாலை **Non — Resident Chief Minister** என்று அரியானாவில் படித்த மக்கள் கேலியாகக் குறிப்பிட ஆரம்பித்தார்கள். ஆனால் பாமர மக்களுக்கு அவர் நேற்றும் இன்றும் நாளையும் கூட 'தாவு' (பெரியப்பா)தான்!

நினைத்ததை முடிக்கின்ற அவரது பிடிவாத குணம், ஜனதாதளம் அமைந்த விதத்திலேயே கூட வெளிப்பட்டது. ''எதிர்க்கட்சிகள் ஒன்றாக இணைந்து ஆகஸ்டு 14ம் தேதிக்குள் புதிய கட்சி உருவாகும்'' என்று அவர் பாட்டுக்கு ஓர் அறிக்கை விட்டு விட்டு சண்டிகருக்குப் பறந்து விட்டார்! எல்லாரும் சிரிப்பதா, அழுவதா என்று யோசித்து முடிவதற்குள் ஆகஸ்டு 14 வந்து விட்டது! தேவிலாலும் தில்லி வந்தார். பெருந்தலைவர்களுடன் தொடர்ந்து ஆறு மணி நேரத்துக்கு மேல் பேசி, அவர்களை வழிக்கு வரச் செய்தார். ஜனதா தளம் பிறந்தது!

**எ**ந்த நேரத்தில் எதை, எப்படிச் செய்வார் தேவிலால் என்று யாராலும் அனுமானிக்க முடியாது! உதாரணத்துக்கு அவர் பதவி ஏற்ற வைபவத்தையே எடுத்துக் கொண்டால், அரசியல் சாசனத்தில் ''துணைப் பிரதமர்'' என்ற பதவியே கிடையாது. எனவே, ஜனாதிபதி, ''அமைச்சர்'' என்ற சொல்லையே பிரயோகித்தார். ஆனால் பதவிப் பிரமாணம் எடுத்த தேவிலாலோ, ''துணைப் பிரதமர்'' என்ற வார்த்தையைத்தான் சொன்னார்! ஜனாதிபதி திருத்த முயன்றும் பயனில்லை! நிகர விளைவு, 'அவர் பதவிப் பிரமாணமே செல்லாது; அவர் பதவி வகிக்கவே கூடாது' என்று இப்போது வழக்குத் தொடரப்பட்டிருக்கிறது!

இவ்வளவு பிடிவாதக்காரரான இவர், அமைச்சரவையில் துணைப் பிரதமர் என்ற முறையில் தமது செல்வாக்கைப் பிரயோகித்துப் பிரதமருக்கும் மற்றவர்களுக்கும் தலைவலியாக விளங்குவதற்கு அதிகமான வாய்ப்புக்கள் இருக்கத்தான் செய்கின்றன. அதே நேரத்தில் துணைப் பிரதமராக இவரது நியமனம், படித்த மக்களிடையே நகைப்பை உருவாக்கினாலும் பாமரரிடையே நம்பிக்கையை ஏற்படுத்தியிருக்கிறது என்பதை வி. பி. சிங் உணர்ந்திருக்கிறார். இதைக் கருதித்தான் அவருக்குத் துணைப் பிரதமர் பதவியைத் தந்தார்; நன்றியுணர்வினால் மட்டும் அல்ல.

தேவிலாலின் முரட்டு சுபாவமும் பிடிவாதமும் அவ்வப்போது செயல்பட்டாலும் அவரால் ஆட்சி கவிழாது என்பதை மட்டும் அவரை நன்கு அறிந்தவர்கள் உறுதியாகக் கூறுகிறார்கள். அதற்கு அவர்கள் கூறும் காரணமும் ஏற்கத்தக்கதாகத்தான் இருக்கிறது. அது, தமக்குக் கிடைத்த பிரதமர் பதவியைத் தாமே மனமுவந்து விட்டுக் கொடுத்ததுடன், அதனைத் தம்மை விடத் தகுதி உள்ளவருக்கு அளிப்பதாக அவரே கூறினார் என்பதுதான்.

பார்ப்போம், நம்பிக்கையின் அடிப்படையில்தானே உலகமே இயங்குகிறது!

**— நமது நிருபர்கள்**

மேலட்டை வண்ணப்படம்: **சுபா**




# New! Bonny Mix Chocolate

## The chocolatey way to start the day!

Give your child the breakfast he simply cannot resist.
Bonny Mix Chocolate. The cereal, fruit 'n' nut porridge
with the additional goodness of chocolate.
The taste your child will really love
throughout the growing years.




**So convenient to prepare**
No need to cook.
Put the required
quantity of Bonny Mix
into a bowl.
Add pre-boiled milk.
Keep stirring gently,
till you get a creamy porridge.



**Bonny Mix**®
The instant porridge
**In 2 varieties:**
Natural • Chocolate

**Good health comes from Glaxo**

GL/C/1/89






# அக்னிப் பரீட்சையில் தேறியவர்!

**சென்னை மியூஸிக் அகாடமி அரங்கில் சௌகரியமாக உட்கார்ந்து குளுகுளு சூழலில் கச்சேரி கேட்டு ரசிப்பவர்கள், அந்த வசதி மிக்க அற்புதமான அரங்கு உருவாகக் காரணமாயிருந்தவர்களை மறந்துவிடக் கூடாது என்பதற்காக அரங்கில் அவர்கள் படங்கள் மாட்டி வைக்கப்பட்டுள்ளன. கே. வி. கே., டி. டி. கே. தவிர "சுந்தரண்ணா" என்று பலராலும் அன்புடன் அழைக்கப்பட்ட சுந்தரமய்யர் படமும் இந்தச் சங்கீத சீசனின் போது திறந்து வைக்கப்படவிருக்கிறது.**

பிரபல வழக்கறிஞரும் மியூசிக் அகாடமி தலைவருமான கே. வி. கிருஷ்ணசாமி அய்யரிடம் நற்பெயர் வாங்கி விட்டால் அது 'அக்னிப் பரீட்சையில் தேறிவிட்டது போல' என்று மயிலாப்பூர் வட்டாரத்தில் அந்நாளில் பேசிக் கொள்வார்கள். அத்தகைய கே.வி.கே., அகாடமியில் பொருளாளராகத் தேர்ந்தெடுத்தது கே. ஆர். சுந்தரம் அய்யரைத்தான்! கே. வி. கே. எதிர்பார்த்தது போலவே சுந்தரமய்யர் பொறுப்பில் அகாடமியின் நிதி நிர்வாகம் சிறந்து, சொந்தத்தில் இடமும் வாங்கப்பட்டது. கதீட்ரல் சாலை — டி.டி.கே. சாலை (அன்று மொபரேஸ் ரோடு) சந்திக்குமிடத்தில் வாங்கப்பட்ட மனையில், அகாடமி அரங்குக்கு அடிக்கல் நாட்டியவர் அன்றைய பாரதப் பிரதமர் ஜவாஹர்லால் நேரு.

அரங்கினைக் கட்டி முடிக்கும் பெரும் பொறுப்பு சுந்தரமய்யர் தோள்களில் பாரமாக அழுத்தியது. ஆனால் அதனை இலேசாக ஏற்று, வெயில் — மழை பாராமல் குடையைப் பிடித்துக் கொண்டு நின்று, கட்டுமானப் பணிகளை மேற்பார்வையிட்டார் சுந்தரமய்யர். பெரிய தொழிலதிபர், வேட்டியை மடித்துக் கொண்டு இப்படி நிற்பதைப் பார்த்தவர்கள் வியந்துதான் போனார்கள். இத்தனைக்கும் அவரது சொந்த நிறுவனங்

கள் அவருடைய நேரடி கவனத்தை எதிர்பார்த்து நின்ற நாட்கள் அவை. ஏனெனில், சுந்தரமய்யர் மிகச் சாமானிய நிலையிலிருந்து படிப்படியாக முன்னேறி, வளர்ச்சியின் ஒரு முக்கியமான காலகட்டத்தில் அன்று இருந்தார். அவருடைய சொந்தக் கதையே விசித்திரமானது!

**ப**ள்ளிப் படிப்பைக் கூட முடிக்க வழியில்லாத அந்த இளைஞன் வாழ்க்கையை எப்படி நடத்துவது என்று யோசித்தான். திருநெல்வேலி மாவட்டத்தில் தனது ஊரிலிருந்து மதுரைக்கு வந்து சேர்ந்தவன், ஒரு சைக்கிளை விற்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருந்தவரிடமிருந்து, அதனை வாங்க முன் வந்தவருக்கு மாற்றிக் கொடுத்ததில் ஓரளவு லாபம் கண்டான். 'பணம் சம்பாதிக்க இப்படி ஒரு வழி இருக்கிறதே' என்று புரிந்து கொண்டு, தொடர்ந்து சைக்கிள் வியாபாரத்தில் இறங்கினான். முன்னேற்ற ஆர்வம் அவனை நாளடைவில் சென்னைக்கு இழுத்து வந்தது. பிராட்வேயில் (இன்று பிரகாசம் சாலை) கடை வைத்து, அயல் நாட்டிலிருந்து என்ஃபீல்ட் சைக்கிள்கள் வரவழைத்து வியாபாரம் செய்தான். அடுத்து என்ஃபீல்ட் மோட்டார் சைக்கிள்களையும் தருவித்து விற்பனை செய்தான். பின்னால் என்ஃபீல்ட் மோட்டார் சைக்கிள்கள் இங்கேயே தயாரிக்கப்படவும், என்ஃபீல்ட் இந்தியா நிறுவனம் பல்கிப் பெருகி, பல துறைகளில் விரிவடைந்து, வேலை வாய்ப்புக்களைப் பெருக்கியதோடு, பாரத நாட்டின் பொருளாதார வளத்துக்குத் தன் பங்கைச் செய்யவும் அந்த இளைஞன் காரணமானான்.

அந்த இளைஞர் பெயர் சுந்தரம். 'ராயல் சைக்கிள்' என்று அவர் கடையின் பெயர். ராயல் சைக்கிள் சுந்தரம் அய்யரும் அவருடைய தமக்கை மகன் ஈசுவர அய்யரும் தொழில் இரட்டையராகச் சென்னையில் பெரும்புகழ் பெற்றனர். 'ஈசன் இன்ஜினியரிங்' என்ற கனரக மின்சாதனங்களைத் தயாரிக்கும் நிறுவனத்தின் வளர்ச்சிக்கு ஈசுவர அய்யர் காரணமானார்.

வேறு ஒரு தொழிலதிபரும் கனரக மின் சாதனங்களை — டிரான்ஸ்ஃபார்மர்கள் முதலியன — தயாரிக்க இந்திய அரசை அனுமதி கேட்ட போது, அப்போது தொழில் — வர்த்தக அமைச்சராக இருந்த டி.டி.கே., சுந்தரம் அய்யரையே கேட்டார், "இன்னொருவருக்கும் அனுமதி வழங்குவது உங்கள் வளர்ச்சிக்கு இடையூறாக இருக்குமா?" என்று.

"இடையூறு ஏதுமில்லை; உதவுபடியாகத்தான் இருக்கும்" என்று சுந்தரமய்யர் பணிந்து பதில் சொன்னார். "போட்டா போட்டி காரணமாகத் தயாரிப்பின் தரம் அதிகரிக்கும்; வியாபாரமும் பெருகும்; நாட்டுக்கும் நல்லது," என்றார்.

சுந்தரமய்யரின் வளர்ச்சி வேகமான வளர்ச்சி என்பதுடன் நேர்மையான வளர்ச்சியாகவும் விளங்கியது.

**அ**காடமி அரங்கம் கட்டி முடிக்க நான்கு ஆண்டுகள் ஆயின. பொருளாளர் சுந்தரம் அய்யர் எப்படி நிதி தேடினார், பற்றாக்குறை இருந்த போது எப்படித் தமது சொந்தப் பணத்தைப் போட்டு அவ்வப்போது ஈடு செய்தார் என்பனவற்றை அன்றைய அகாடமி செயலாளர்கள் நன்கு அறிவார்கள்.

ஒரு பொது நிறுவனத்தின் நிர்வாகம் எப்படிப் பொறுப்புணர்வுடனும் சிக்கனமாகவும் நடக்க வேண்டும் என்பதற்குச் சுந்தரமய்யர் எடுத்துக்காட்டாக விளங்கினார். தர்மகர்த்தா போன்ற நிலையில் இருந்த அவர், தாமே டிக்கெட் வாங்கிக் கொண்டுதான் அரங்கில் கச்சேரி கேட்க நுழைவார். நண்பர்கள் யாராவது ஓசியில் உள்ளே போக நினைத்தால், அவர்கள் மனம் கோணாதிருக்கத் தடுக்காமல் அனுமதித்துவிட்டு, அவர்கள் சார்பில் தாமே தமது பணத்தில் டிக்கெட் வாங்கி விடுவார்!

ஒரு வெள்ளி விழாக் காலம் அகாடமியின் பொருளாளராக இருந்த சுந்தரமய்யர், பின்னர் அதன் தலைவராக இருமுறை தேர்ந்தெடுக்கப்பட்டார்.

விருந்தோம்பல் அவர் உடன் பிறந்த குணம். அதிலும் சங்கீத வித்வான்களில் அவர் உபசரிப்பைப் பெறாதவரே இருக்க முடியாது. சங்கீதத்தில் அத்தனை ஈடுபாடும் வித்வான்களிடம் அத்தனை மரியாதையும் வைத்திருந்தார்.

சில மாதங்களுக்கு முன்னர் அவர் காலமானபோது அவர் கட்டிலருகே ஒலித்துக் கொண்டிருந்தது கர்நாடக சங்கீத இசைதான். உயர்ந்த சங்கீதத்தில் உடல் உபாதைகளை மறந்து, இறைவனுடன் ஐக்கியமாகி அமைதியடைந்தார், சுந்தரமய்யர்.

— டி. எஸ். ரங்கராஜன்.

அடுத்த இதழில்....





குழந்தைகளுக்கும் உரிமைகள் உண்டு!
— சிறப்புக் கட்டுரை

மற்றும்

**1990 — ஆம் ஆண்டின் கண்ணைக் கவரும் வண்ணப்படக் காலண்டர்!**





எப்படியாவது அழுகையை நிறுத்த முயற்சி பண்ணுங்க!



காஷ்மீர் வன்முறை



முஃப்தி முகம்மது சயீத்
இலங்கை அணைய இடமில்லை. ஆனா புயலைச் சமாளிக்கும் வழியைப் பாக்கணும்!



ஐயகோ!. எதிர்க்கட்சித் தலைவர் ஆயிட்டீங்க!.. எங்க ஆழ்ந்த அனுதாபம்.. என்ன நடக்குமோ.. ஏது நடக்குமோ.. எங்க நிலைமையைப் பாருங்க!. பாவம்!..
வீரப்பன்
ராஜா
திருநாவுக்கரசு



# கல்கி

1989 டிசம்பர் 24
மலர் 48 இதழ் 21
சுக்ல மார்கழி 9



## ஆரம்ப சூரத்தனம் கடைசி வரை தொடரட்டும்!

பிரதமர் தேர்தலில் தம்மைப் பெரிய சாணக்கியர் என்பது போல் தேவிலால் காண்பித்துக் கொண்டார் என்றால், அமைச்சரவை அமைப்பதில் தமது ராஜதந்திரம் குறைந்து போய் விடவில்லை என்பதாக வி. பி. சிங் உணர்த்தியிருக்கிறார். பதவிப் பிரமாணம் ஏற்ற போது, யாருக்கு எந்தத் துறை ஒதுக்கப்படும் என்பதைக் கூறாமல் வைத்திருந்து பதவி ஏற்ற பிறகு துறைகளைப் பகிர்ந்து அளித்ததன் மூலம் யாருமே 'இது வேண்டாம் அது வேண்டும்' என்று பேரம் பேச இடமில்லாமல் போயிற்று. முணுமுணுப்பு ஏதுமிருந்தாலும் அதை அமைச்சர்கள் மனசுக்குள்தான் நடத்திக் கொள்ள வேண்டும் என்ற நிலை. பதவிக்கு வந்திருப்பது மைனாரிடி அரசு என்பதையும் பல்வேறு கட்சித் தலைவர்களைத் திருப்திப்படுத்த வேண்டியிருந்தது என்பதையும் நினைவில் கொண்டால் பிரதமரின் சாமர்த்தியம் புலனாகும்.

சக்தி மிக்க உள்துறை அமைச்சர் பதவி தேவிலாலுக்குத்தான் தரப்பட வேண்டியிருக்கும் என்று பலரும் எதிர்பார்த்தனர். ஆனால் துணைப் பிரதமர் பதவியைத் தயக்கமின்றி அவருக்குத் தந்த பிரதமர், உள்துறையைத் தராமல் விவசாயத் துறையைக் கொடுத்தார். அத் துறையில் நீண்ட அனுபவம் உள்ள தேவிலாலால் அதனை மறுக்க முடியவில்லை என்பதோடு, உள்துறை, எளிதில் உணர்ச்சிவசப்படக்கூடிய அவரிடம் சிக்காமல் தப்பியது!

முப்தி முகமது சய்யீதுக்கு உள்துறையை அளித்ததில் தேவிலால் கூட குறைபட முடியாது! பப்ரி மஸ்ஜித் பிரச்னை போன்றவை தலையெடுத்திருக்கும் இந் நாளில் சிறுபான்மை மக்கள் இந்த நியமனத்தால் நம்பிக்கை பெற முடியும்; அதே சமயம் பெரும்பான்மையினரின் மனக் கசப்பை அமைச்சர் சம்பாதித்துக் கொள்ளவும் முடியாது. எனவே, இரு சாராருக்கும் பொதுவான சமரசமும் நல்லெண்ணமும் பெருக அமைச்சர் முயற்சிகளை மேற்கொள்வார் என எதிர்பார்க்கலாம்.

ரயில்வே துறையை அதில் நீண்ட நாள் அனுபவம் மிக்க, தொழிலாளர் தலைவராகவும் இருந்துள்ள ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ் பெற்றுள்ளார். மது தண்டவதே, அறிவு முதிர்ச்சியும், திறமையும், அனுபவமும், நேர்மையும், கண்டிப்பும் உடையவர். அவரிடம் நிதி இலாக்கா ஒப்படைக்கப்பட்டுள்ளது. சிக்கனம் தாரக மந்திரமானால் விலைவாசி ஸ்திரப்படும்.

பாதுகாப்புத் துறையைத் தம்மிடமே வைத்துக் கொண்டதன் மூலம் அநாவசியப் பழிவாங்கல்களுக்கு இடம் தராமல், சட்டம் தன் கடமையைச் செய்ய வி. பி. சிங் அனுமதிப்பார் என்று எதிர்பார்க்கலாம். அண்டை நாடுகளுடன் நட்புறவுகளை வளர்த்துக் கொள்வதன் மூலம் குஜ்ரால் உதவினால், பாதுகாப்புத் துறைச் செலவினங்களைப் பிரதமர் குறைக்க இயலும். இதனால் தொழில் வளப் பெருக்கத்துக்கு நிதி திருப்பி விடப்பட்டு வேலை வாய்ப்புக்கள் அதிகரிக்க இடமுண்டு.

திட்டக் கமிஷன் தலைவராக அமைச்சர் அந்தஸ்துடன் ஹெக்டேயின் நியமனம் வரவேற்கத்தக்கது. கிராமப்புற வளர்ச்சி, அங்கு மக்கள் பலத்தை அதிகமாகப் பயன்படுத்திக் கொள்ளும் தொழில்களுக்கு முன்னுரிமை, சலுகைகள் என்று அடிப்படைச் சிந்தனையிலேயே ஒரு திருப்பம் ஏற்பட வேண்டும்.

அமைச்சரவை அமைந்த கையோடு, பல்வேறு அமைச்சரவை உப குழுக்களும் உருவாகி, பிரச்னைகளை அவை விவாதிக்கவும் ஆரம்பித்து விட்டன. பஞ்சாபுக்குப் பிரதமர் சென்று வந்ததும் பொற் கோயிலில் பிரார்த்தித்ததும் பரபரப்பை மட்டுமின்றி ஏராளமான நல்லெண்ணத்தையும் உருவாக்கியிருக்கிறது. இதை அஸ்திவாரமாகக் கொண்டு, சூடு ஆறுவதற்கு முன் பிரச்னைக்குத் தீர்வு காண முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும். இலங்கையின் அயல்நாட்டு அமைச்சர் விஜயரத்ன பிரதமரைச் சந்தித்துத் திரும்பியிருக்கிறார். இலங்கைத் தமிழர் பிரச்னையின் தீர்வுக்கு உழைக்குமாறு கருணாநிதியையும் பிரதமர் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

எல்லாமே ஆரம்ப சூரத்தனமாக முடிந்து போய் விடக் கூடாதே என்பதுதான் நம் கவலை! ஏனெனில், ராஜீவும் பதவி ஏற்ற போது இதே போல்தான் ரொம்பச் சுறுசுறுப்புக் காட்டினார். 'மிஸ்டர் கிளீன்' என்றும் வர்ணிக்கப்பட்டார். அப்புறம்தான் கழுதை தேய்ந்து கட்டெறும்பாகி விட்டது. அந்தக் கதி இந்த அமைச்சரவைக்கும் நேர்ந்து விடக் கூடாது!

எங்கே, எப்போது தவறு செய்வார்கள் என்று காத்திருக்கிறது காங்கிரஸ். 'கவிழ்க்க முயற்சி செய்யாவிட்டாலும் கண்டிக்கத் தயங்க மாட்டோம்' என்று விழிப்புடன் இருக்கிறது பி. ஜே. பி. இடையில் நடக்கும் தேசிய முன்னணி அரசு அவசரப்பட வேண்டாம். நிதானமாக நடந்தாலும் தடுமாறாமல் முன்னேறி, விபத்தின்றி லட்சியங்களை அடையட்டும். மக்களின் நன்மதிப்பைப் பெறட்டும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.




# வாழ்க்கைக்கோர் பரிசு



அதோ...
கண்சிமிட்டும் விண்மீன் —
அழைத்திடுகிறது — வாருங்கள் —
கிழக்கிலிருந்து வந்த நல்லோரைப்
போல வாருங்கள் —
பரிசுகளுடன் வாருங்கள் —
மேன்மைமிகு ஆண்டவனை துதிபாடி,
கொண்டாடிட, பரிசுகள் வழங்கிட —
வாருங்கள்.
ஆசிகளுடனே பேரின்ப வாழ்வை
பெற்றிட வாருங்கள்!
கிறிஸ்துமஸின் புத்துணர்ச்சி
என்றென்றும் உங்களுடன் இருக்கட்டும்!



**The South Indian Bank Ltd**

Regd. Office : Trichur, Kerala.

# ஏழாவது இரவு

9

கதை: அபர்ணா நாயுடு

சித்திரம்:

'என்ன சொன்னாலும் புரிந்து கொள்ள மாட்டேன் என்கிறாளே இந்தப் பெண்!' என்று தமக்குள் சலித்துக் கொண்டார் இன்ஸ்பெக்டர் முரளி.

யோசித்தவாறே எழுந்தார். வாசலை நோக்கி நடந்தார். வெளியே காத்திருந்த ஜீப்பில் ஏறி அமர்ந்ததும் பார்வை எதிரே தெருவில் படர்ந்தது.

தொலைவில் அந்தப் பெண்கள் இருவரும் குறுக்கே தெருவைக் கடந்து கொண்டிருப்பது தெரிந்தது. அதற்கும் அப்பால் — இன்னும் தொலைவில் ஒரு கார் படுவேகமாக வந்து கொண்டிருந்ததும் தெரிந்தது.

யோசித்தார். விருட்டென்று ஜீப்பைக் கிளப்பி அவர்களை நோக்கி வேகமாகச் செலுத்தினார்.

அதே வேளையில் —













பரவாயில்லை. அதுக்குள்ள இன்னொரு முக்கிய வேலையை முடிச்சுடலாம். ஜீப்பைத் தாண்டினதும் நேராப் போயிடு.


கார் கடந்து சென்ற பிறகு —
என்ன இது, இன்ஸ்பெக்டர் வந்திருக்கார்?
முகத்துக்கு நேரா கேட்டுட்டா தன்னால தெரிஞ்சு போகுது.


எவ்வளவு சொன்னாலும் நம்ப மாட்டேன்கறீங்க. இப்போ நான் வந்திருக்காட்டா உங்க கதை முடிஞ்சு போயிருக்கும்.


என்ன சார் இது புதுக்கதை?
கதையில்லை. உண்மை. இந்த முயற்சியை விட்டுடுங்க. நான் சொல்றபடி நடந்துக்குங்க.


நேரிடையாக் கேட்கிறேன். இந்த விவகாரத்துல ஈடுபடாம எங்களைத் தடுக்கறதுனால உங்களுக்கு என்ன லாபம்?
லட்சம் ரூபாய்!
என்ன?

# மயிலை மாதா



* மயிலை மாதா.



* செயின்ட் தாமஸைக் கொலை செய்யப் பயன்படுத்திய ஈட்டி யின் பிடி, அவர் எலும்பின் ஒரு துண்டு.

* சாந்தோம் மாதா கோயில்.



சென்னை கடற்கரைச் சாலையோடு சென்று ஸாந்தோமை அடைந்தால் கழுத்தை உயர்த்திப் பார்த்தே ஆக வேண்டும். ஸாந்தோம் தேவாலயக் கோபுரம் கவனத்தை ஈர்க்காமல் விடாது!

கிறிஸ்துவின் தூதர்கள் பன்னிரண்டு பேரில் ஒருவர் செயின்ட் தாமஸ். அவரால் கட்டப்பட்டு, பின்னால் அவருடைய சமாதியையும் உள்ளடக்கியது இந்தத் தேவாலயம்.

கடற்கரையில் பிரம்மாண்டமான ஒரு மரக் கட்டை அடித்து வரப்பட்டது. பல யானைகள் முயன்றும் அதைக் கரை சேர்க்க முடியவில்லை. அங்கே வந்த செயின்ட் தாமஸ், தம் இடுப்பில் கட்டியிருந்த துணியைக் கயிறு போல் அப்படியே கட்டி, வெளியே இழுத்துப் போட்டார். மைலாப்பூர் அரசன் வியந்து போய், அவரிடம் "நீங்கள் உங்கள் விருப்பம் போல் மரத்தை உபயோகித்துக் கொள்ளுங்கள்!" என்றான். அதை வைத்து ஆரம்பித்துக் கட்டிய தேவாலயம்தான் இது.

கர்ண பரம்பரைக் கதை ஒருபுறமிருக்க, சரித்திரம் கூறுவது என்ன? கி. பி. 52 ஆம் வருடத்தில் இந்தியாவுக்கு வந்தவர் செயின்ட் தாமஸ். 68 ஆம் ஆண்டில் பரங்கி மலை எனப்படும் செயின்ட் தாமஸ்




**தலை** கனத்திருந்த
தீக்குச்சி யொன்று —
காத்திருந்த காலம்
கனிந்தது!

அது...
தேவனின் திருச்சபையில்
மெழுகுவர்த்தியை
முத்தமிட்டு விட்டுக்
கருகி, விழுந்து புகைந்தது!

தீக்குச்சியைப் பார்த்து
மெழுகுவர்த்தி சொன்னது:
'தீக்குளித்த தீக்குச்சியே
உன்னைச்
சாம்பலாக்கியது —
உன் 'தலைக்கனம்' தான்'

புகைந்தபடி தரையிலிருந்து
தீக்குச்சி சொன்னது:
'ஒரு கனத்த கொள்கைக்காகத்தான்!
தலை கனத்துக் காத்திருந்தேன்!'

மெழுகுவர்த்தி கிண்டலாய்க் கேட்டது:
'கொள்ளிக் குச்சிக்கும்
ஒரு — கொள்கையா?'

தீக்குச்சி இறுதியாய்
மெள்ள முனகிற்று:
'நான் தலைகனத்துக்
காத்திருந்தது —
உன் ஜனனத்திற்காகத்தான்!'

உச்சி முதல்
உள்ளங் கால் வரை...
கனத்திருந்த மெழுகுவர்த்தி
உருகிக் கரைந்தது!

— கருமலைப் பழம்நீ

மவுண்ட்டில் பிரார்த்தனை செய்து கொண்டிருந்த போது, எதிரிகளால் குத்திக் கொல்லப்பட்டார். அவரது உடல் சாந்தோம் தேவாலயத்தில் அடக்கம் செய்யப்பட்டது. அவர் கொலை செய்யப்பட்ட தலத்தின் மண் அடங்கிய பானை ஒன்றும், அவரைக் கொல்லப் பயன்படுத்திய கூரிய கத்தியின் பிடியையும் அங்கேயே புதைத்தார்கள்.

செயின்ட் தாமஸின் சமாதி, சர்ச்சின் நட்ட நடுவே, தரை. மட்டத்துக்குச் சற்றுக் கீழே அமைந்திருக்கிறது. சலவைக் கல் வேலைப்பாடுகளுடன் காணப்படுகிறது. இந்தக் கல்லறையில் வைக்கப்பட்டுள்ள பானையிலிருக்கும் மண், ராஜா மகாதேவனின் பிள்ளை நோய்வாய்ப்பட்ட போது குணப்படுத்துவதற்காகத் திறக்கப்பட்டதாம்.

இரண்டாவது முறையாகவும் இரண்டாம் நூற்றாண்டில் திறந்திருக்கிறார்கள்.

மூன்றாவது முறை கல்லறை திறக்கப்பட்டது 1523ல்; போர்ச்சுக்கீசியர்கள் மைலாப்பூருக்கு வந்து, பாழடைந்து போயிருந்த சாந்தோம் சர்ச்சைப் புதுப்பிக்க ஆரம்பித்த போது.

1293ல் மார்க்கோபோலோ இங்கே வந்திருந்ததாகத் தமது பயண நூலில் குறிப்பிட்டிருக்கிறார்.

1545ல் கோவாவிலிருந்து செயின்ட் பிரான்சிஸ் சேவியர் இங்கே வந்து நான்கு மாதங்கள் தங்கியிருந்த போது, இந்த தேவாலயத்திலேயே உள்ள மயிலை மாதாவின் சந்நிதியில் பிரார்த்தனை செய்திருக்கிறார்.

இப்போதுள்ள தேவாலயத்தை 1896ல் மறுபடி புதுப்பித்துக் கட்டியிருக்கிறார்கள். 1950க்குப் பிறகு இந்தத் தேவாலயத்தின் நிர்வாகம் மயிலை ஆர்ச் பிஷப்பின் கீழ் வந்திருக்கிறது.

போப் ஜான் பால்—2, பிப்ரவரி 86ல் இங்கே விஜயம் செய்திருக்கிறார்.

ஆளுநர் குரானா, முன்னாள் அமைச்சர் பொன்னையன், காங்கிரஸ் பிரமுகர் காட்கில், கியானி ஜெயில்சிங், ஸ்பானிஷ் அரசி பல நாட்டுத் தூதர்கள் என்று விஸிட்டர்ஸ் புக் நிறைந்து காணப்படுகிறது. இவர்களுள் ஸ்பானிஷ் அரசி கையெழுத்துப் போட்டு விட்டு om என்றும் எழுதியிருக்கிறார், மதங்களிடையே ஒற்றுமையை வலியுறுத்துவது போல.

நாகேஷ் மகன் திருமணம், (சாட்சி சிவாஜி கணேசன்) நடிகை பிரமிளா திருமணம், விஜய் அமிர்தராஜ் திருமணம், விஜிபி மகள் திருமணம் எல்லாம் இங்கே தான்.

ராஜீவ் பிறந்த நாளுக்கு மூப்பனார் வருடா வருடம் இங்கே விசேஷ பிரார்த்தனை செய்வதுண்டாம்!

— **சித்தார்த்**

படங்கள்: **ரவிசங்கர்.**

# அடுத்த வீட்டில் கலர் டிவி களிப்பு. ராமு வீட்டில் மனைவியின் நச்சரிப்பு.

# லக்ஷ்மி விலாஸ் பாங்கின் புதிய கடன் இணைந்த டெபாசிட் திட்டம் அவருக்கென்றே உள்ள திட்டம்.



லக்ஷ்மி விலாஸ் பாங்கின் புதிய சர்வமங்களா திட்டம்.



இந்தத் திட்டம் ரெகரிங் டெபாசிட் திட்டத்திலிருந்து உருவாக்கப்பட்டுள்ளது. டெபாசிட் செய்யும் காலம் — 24,36,48 மற்றும் 60 மாதங்கள். திட்டம் முடிவடையும் நாளில் மொத்தத் தொகையைப் போல் இரு மடங்குக்கு (ரூ. 25,000) மேற்படாமல்) கடன் தொகை பெற்றுக் கொள்ளலாம். இந்தக் கடன் தொகையை நுகர்வோர் பொருட்களான ஸ்கூட்டர், மொபெட், ஃப்ரிஜ், கலர் டிவி, ம்யூஸிக் ஸிஸ்டம், வி.ஸி.ஆர். போன்றவற்றை வாங்கப் பயன்படுத்திக் கொள்ளலாம். இக்கடன் தொகையை முதலில் டெபாசிட் செய்தது எவ்வளவு மாதமோ, அத்தனை மாத தவணையில் திருப்பிச் செலுத்தலாம்.



**The Lakshmi Vilas Bank Ltd.**

கரூர் 639 001

சேர்மன்: ஜ. சதா சிவ குப்தா

எங்களது நோக்கம் உங்களுக்கு உதவுதல்

21

# இரண்டாவது சூரியன்

ஏன், எம். எல். ஏ., எம். பின்னு அலைய வேண்டும்? பேசாமல் தலைவரிடம் பேசிவிட்டால். எப்படிப் பேசுவது. போனிலா? என்னவென்று பேசுவது? பேசுவார்களா இப்போது? இப்போது கவிஞர் மனைவி இல்லையே நான்! மதிப்பார்களா? விவாகரத்துச் செய்தது விருப்பமாய் இருக்குமா; வெறுப்புடன் பேசச் சொல்லுமா?

பரத் எங்கோ எதற்கோ மாட்டிக் கொண்டதற்கு இங்கே போவது சரியா? யார் என்ன என்று கேட்டால் எப்படிச் சொல்வது,என் மாணவியின் தாய்மாமன் என்றா? இந்த பரத் எதற்கு வீடியோ கேசட், அதுவும் திருட்டுக் கேசட்டில் மாட்டிக் கொள்ள வேண்டும்? என்ன செய்வது இப்போது? போன் செய்யலாமா, எம். எல். ஏ.விடமே பேசலாமா?

"இல்லை. தலைவர் வீட்டிற்கு போன் செய்வோம். என்னைப் பற்றி இப்போது என்ன நினைக்கிறார்கள் என்றும் தெரிந்து கொள்வோம். டைரியை எடுத்துக் கொண்டாள். தலையை இரண்டு முறை சீவிக் கொண்டையாய் முடிந்து கொண்டாள். "வனிதா வா என் கூட" என்று கூப்பிட்டாள்.

மளிகைக் கடைக்குப் போனாள். போன் கேட்டு வாங்கி எண்களைச் சுழற்றினாள்.

"வணக்கம். தலைவர் இல்லம்," குரல் கேட்டது.

தன் பெயர் சொன்னாள். "தலைவர் இருந்தால் அவரோட பேசணும். இல்லைன்னா அம்மாவோட பேசணும். என் பேர் சொல்லுங்க போதும்."

சற்று நேரம் மௌனம். போன் கனெக்ஷனை மாற்றும் ஒலி.

"யாரு?" பெண் குரல் கேட்டது.

"அம்மாவா? நான்தாம்மா பானுமதி. கவிஞரோட...."

"அட, பானுமதியா...? நல்லா இருக்கியா?" பார்த்து ரொம்ப நாளாவுது. விவாகரத்து வாங்கிட்டதாச் சொன்னாங்க. இப்ப எங்கே இருக்கே? அப்பாவோடயா?"

"இல்லேம்மா... நானும் குழந்தைகளும் தனியா இருக்கோம்."

"என்ன பானுமதி தலைவரோட பேசணுமா? இரு. நம்ம பானுமதிங்க..." அங்கே பேச்சுக் குரல் கேட்டது.

தலைவர் போனில் தம் பெயர் சொன்னார். வணக்கம் தெரிவித்தார்.

பானுமதிக்கு வியர்த்தது.

"வணக்கங்க. நல்லா இருக்கீங்களா? ரொம்ப நாளாச்சுப் பேசி... அதான்..."

"சொல்லம்மா என்ன வேணும்? விவரம் கேள்விப்பட்டேன். கட்சியில கூட நடவடிக்கை சரியில்லை கவிஞருக்கு. ரொம்பக் கஷ்டம் கொடுத்தாருன்னு பிறகுதான் சொன்னாங்க. நல்லா இருக்கீங்களா? பசங்க நலமா?"

"எல்லாம் நல்லா இருக்கோம்."

"என்ன வேணும்?"

"என் சிநேகிதர் கடைங்க. வீடியோ கேசட் கடை. போலீஸ் ரெய்ட் ஆயிடுச்சு. யேசு கிறிஸ்து பத்தி ஏதோ இங்லீஷ் கேசட் வச்சிருந்தாராம்."

"பெயர் என்ன?"

சொன்னாள்.

"நான் சொல்றேன். ஒரு நாள் குழந்தைங்களோட வீட்டுக்கு வாங்க. வணக்கம்."

"யாருங்க அது?" வனிதா கேட்டாள்.

"சி. எம்."

"சீஃப் மினிஸ்டரா? அவர்கிட்டயா பேசினீங்க?"

"ஆமாம். போய் மாமாகிட்டச் சொல்லு. ஏதாவது பிரச்னை வந்தா என்னை உடனே பார்க்கச் சொல்லு."

கடைக்காரனிடம் காசு கொடுத்துவிட்டு வீட்டுக்கு வந்தாள். குழந்தைகள் மறுபடி கார்ட்டூனோடு உட்கார்ந்திருந்தன.

**போ**ன் செய்து சரியாய் இரண்டு மணி நேரம் கழித்து, பரத் உள்ளே நுழைந்தான்.

"கேசட் எல்லாம் திருப்பிக் கொடுத்துட்டாங்க. வெளியே விட வேணாம்னு கேட்டுக்கிட்டாங்க. நல்ல வேளை தமிழ் கேசட் மாட்டலை. எங்க தலைவர் வரைக்கும் போயிட்டீங்கன்னு குறைபட்டுக்கிட்டாங்க. எனக்கு ஒண்ணும் புரியலை. நல்லவேளை வனிதா வந்து சொல்லிச்சு, நீங்க சி. எம். கிட்ட பேசினீங்கன்னு. ரொம்ப தேங்க்ஸ் டீச்சர். இனிமே கடைப் பக்கம் யாரும் தலை வச்சுப் படுக்க மாட்டாங்கன்னு நினைக்கிறேன்."

"தப்பு. இந்தத் தடவை விட்டுட்டாங்க. நாம ஏன் மாட்டற மாதிரி நடந்துக்கணும்? தேவையில்லாத கேசட் வச்சுக்கணும்?"

காசு ஆசைதான். நூத்தி நாப்பது ரூபாய்க்கு வாங்கின கேசட்டுல ஆயிரம்

பாலகுமாரன்



**அப்பாவின் வாரிசு!**

சரண்சிங்கின் மகனான அஜித் சிங் லண்டனில் கம்ப்யூட்டர் படிப்புப் படித்தவர். அங்கேயே இஞ்ஜினியர் வேலை பார்த்தார். சரண்சிங்குக்கு உடல் நிலை குன்றிய போது, இந்தியா வந்தார். சரண்சிங் தமது வாரிசாக அரசியலில் அறிமுகப்படுத்தினார். லோக்தளம் ஜனதாவில் இணைந்த போது, ஜனதா தலைவராக இருந்த சந்திரசேகர் தமது பதவியை விட்டுக் கொடுக்க இவர் தலைவரானார்.

ரூபாய் சம்பாதிச்சுடலாம்னு...''

''வேண்டாமே. ஆயிரம் சம்பாதிக்க நாலாயிரம் அபராதம் கட்டி அவஸ்தைப் படறதைவிட...''

பேசாமலிருந்தான்.

''என்ன?''

''நியாயமா இருந்தாக் காசு சம்பாதிக்க முடியாதுங்க. நீங்க என்னைக் கேட்டிருந்தா இதைப் போய் ஏன் சி. எம். கிட்ட சொல்லணும்? விட்டுடுங்கன்னு சொல்லியிருப்பேன். வேற வழியில திருப்பியிருப்பேன்.''

''உனக்கேன் வம்புன்னு சொல்றீங்களா?''

''இல்லை. இவ்வளவு சிரமப்பட்டிருக்க வேணாம். அவர் வரைக்கும் இது போயிருக்க வேணாம்.''

''நன்றி. இந்தாங்க உங்க கேசட். டெக் எடுத்துக்கிட்டுப் போகலாம்.''

''கோவிச்சுக்கிறீங்களே...?''

''இல்லீங்க. தொந்தரவு செய்துட்டோமோன்னு வருத்தப்படறேன்.''

''நான் அப்படிச் சொல்லலை. இது வழக்கமா நடக்கிறதுதான். தமிழ் கேசட் மாட்டினால் குறிப்பிட்ட சினிமாக்காரங்க வந்து கஷ்டம் கொடுப்பாங்க. அதனால ஒரு ஜாக்கிரதைக்கு வனிதாவை அனுப்பினேன். உங்க வீட்ல பூந்து, எப்படி இந்த கேசட் வந்ததுன்னு சில சமயம் கலாட்டா நடந்துடலாம்.''

''நன்றி. எடுத்துக்கிட்டுப் போங்க.''

''நான் சொல்றது உங்களுக்குப் புரியலை?''

''புரிஞ்சு போச்சுங்க. போலீஸுக்கு லஞ்சம் கொடுத்து நானே சமாளிச்சுப்பேன். உனக்கெதுக்கு வீண் வேலை. அப்படித் தானே?''

''ஒரு வகையில அப்படித்தான். பரத் நமக்கு ஏதோ உதவி செஞ்சானே, பரத்துக்கு நாம் செய்வோமேன்னு நீங்க போன் பண்ணினது தப்பில்லை. தேவையில்லையேங்கிறது என் வாதம். தேவைப்பட்டால் நானே வந்து கேட்டிருப்பேனே?''

''இந்த டெக் எப்படிப் பிரிக்கறது?''

''அது இருக்கட்டும். பசங்க பார்க்கட்டும் முழுக்க.

''வேணாம். அ னை ச் சு டு ராஜேந்திரா...''

''இவ்வளவு எமோஷனலா இருக்கக் கூடாதுங்க, பானுமதி.''

''எனக்கு அவமானம் தாங்காது!''

''அவமானம் பட்டதில்லை. அதனால் தாங்கமுடியலை.வார்த்தைக்குக்கூட கோவப் படறீங்க.''

''நா ன் அவமானப்படலையோ? என்ன தெரியும் என்னைப் பத்தி உங்களுக்கு?''

''சகலமும் தெரியும். கவிஞரால நீங்க பட்ட கஷ்டம் அத்தனையும் தெரியும்.''

''வக்கீல் சொன்னாரா?''

''இல்லை.''

''யார்?''

''கவிஞர்.''

பளீரென்று யாரோ மல்லாக்கத் தள்ளியது போல் பானுமதி உணர்ந்தாள்.

''எப்படி... எப்படி?'' குழறினாள்.

''நேத்திக்கு அடையார் ஹோட்டல்ல முழு போதைல இடம் தெரியாம என் டேபிள் கிட்ட உட்கார்ந்து என்கிட்ட சகலமும் உளறினாரு. ஒரு அரை மணி நேரத்துக்கு மேல அவர் அழுகையைத் தாங்க முடியலை. கொண்டு போய்க் கார்ல விட்டுட்டு மறுபடி உட்கார்ந்தேன். என்னால தாங்க முடியலை.''

''ஏன்?''

''என்னவோ வேதனை. எனக்குத் தெரிஞ்சவங்களுக்கு இத்தனை கஷ்டமான்னு வேதனை. வீட்டுக்கு வந்தேன். வனிதா சொல்லிச்சு. டெக் கேட்டுட்டு வேண்டாம்னுட்டாங்கன்னு. உடனே கொண்டு வந்து வச்சேன்.''

''ஒரு இரக்கம்...''

''யெஸ். ஒரு இரக்கம்.''

''அந்த இரக்கம் எங்களுக்கு வரக் கூடாதா?''

''வரலாம். நான் இந்த உதவி உங்களுக்குச் செய்யட்டுமான்னு கேட்டிருக்கலாம்.''

''தப்புத்தான். என்னமோ செய்யணும்னு ஒரு நன்றி உணர்ச்சி. இப்பத்தான் தெரியுது நன்றியெல்லாம் தப்புத்தான்னு. யார் எக்கேடு கெட்டா என்னன்னு இருந்திருக்கணும். தெரியலை.''

''கோபம் வந்தால் மட்டும் போதாது. புத்தி வேணும் மனுஷாளுக்கு. என்ன செய்யறோம்னு செய்யற போதே நாறு விதமாக் கேட்டுக்கணும். உதறிட்டு எடுத்துக்கிட்டு போடா எல்லாத்தையும்னு வெட்டி விடறது நியாயமில்லை.''

''யப்பா அறுக்கறீங்க. நொய்யு நொய்யுன்னு?''

''ஏங்க புரியலை உங்களுக்கு? என்ன செய்யணும்னு புரியாமதான் அந்த ஆளோட பதினோரு வருஷம் குடித்தனம் பண்ணினீங்களா? அறுத்துக்கிட்டு சீ போடான்னு

வாறதுக்கு இத்தினி வருஷம் ஆச்சா?''

பானுமதி பேசாது நின்றாள்.

''இந்தக் கையால அவளை எத்தினி தடவை அடிச்சிருக்கேன் தெரியுமான்னு மேஜைல குத்திக்கிட்டாரு. உடம்பு ஆத்தி ரத்துல பதற்றப்பட்டுப் போச்சு. நல்லாக் குடிக்க விட்டு, மாடிப்படில கால் இடற விட்டுடலாமான்னு தோணுச்சு. நீங்க, சாவித்திரி எல்லோருமே ஒரே டைப். சுயமரி யாதை இல்லாத டைப்.''

''நீங்க எதுக்கு இப்ப கோபப்பட ணும்?''

''எங்க அக்கா... வனிதாவோட அம்மா இப்படித்தான் அவஸ்தைப்பட்டாள்.''

''பானுமதி மச்சரைப் பார்க்கிற போது சொந்த அக்கா ஞாபகம் வருதா?''

''இல்லை.''

''பிறகு?''

''எங்க அம்மா ஞாபகம் வருது.''

''புரியலை.''

''எங்கப்பா ஸ்பிரிட் வியாபாரம். கலக்கிக் கலக்கி ஊரைக் கெடுத்தாரு. எங் கம்மா ஏன் இதுன்னு ஒரு வார்த்தை கேட்ட தில்லை. எங்கம்மாவை ஏண்மன்னு ஒரு தடவை கூட எங்கப்பா கூப்பிட்டதில்லை. ரொம்ப ஒத்துமை ரெண்டு பேரும். எங்கப்பா சாப்பிடாம எங்கம்மா சாப்பிட மாட்டாங்க. எங்கம்மாகிட்ட ஒரு வார்த்தை கேட்காம, எங்கப்பா எதுவும் செய்ய மாட் டாரு. அந்த ஒத்துமைக்கு என்ன கார ணம்னு இதுவரைக்கும் புரியலை. நேத்து. ரொம்ப யோசிச்சாப் புரிஞ்சுது.''

''என்ன?''

''ஒருத்தரை ஒருத்தர் திருத்த முயற்சி செய்யலை. மாத்திக்கோ உன்னைன்னு வற் புறுத்தலை. எங்கப்பா தொழிலை எங்கம்மா குத்தம் சொல்லலை. எங்கம்மா சமையலை எங்கப்பா தூக்கி எறியலை. அது அது அப்படித்தான்னு இருந்தாங்க. மாத்தச் சொல்றப்பத்தான் எதிர்ப்பு வருது. ஒரு தடவை எங்கப்பா மேல போலீஸ் கேஸாயிடுச்சு. எங்கம்மா ஆ, ஊன்னு கத்தலை. அப்படித்தான்னு சும்மா இருந்துட் டாங்க. ஆயிரம் ரூபா வீட்ல ஒரு தடவை திருட்டுப் போச்சு. எங்கப்பாவும் கூச்சல்



போடலை. நாம என்ன செய்யறோம் தெரியுமா, உதவி செய்து செய்தேன்னு சொல்றோம். உதவி வாங்கிட்டு வாங்கிட்டமேன்னு வெட்கப்படறோம். அதுல மேற்கொண்டு தப்பு நடந்துடுது.''

''இப்ப எதுக்கு இது? நான் என்ன செய்யணும்?''

''உங்க வேலையைக் கவனிங்க. என் மேல கோபமோ அனுதாபமோ வேணாம். இரண்டுமே கஷ்டம். எனக்குப் புத்தி சொல்லி என்னை நல்வழிப்படுத்த வேணாம். எரிச்சல்தான் வரும். என் வாழ்க்கை எனக்குப் போராட்டம். அதுல நல்லது கெட்டது எல்லாம் இருக்கும். எப்பவுமே எல்லாருக்கும் மேச் பண்ண ட்ரை பண்ணாதீங்க பானுமதி. எல்லா உயிருக்கும் வாழத் தெரியும். வாழ்ந்துக்கிட்டுதான் இருக்கு.''

''உலகத்துல இத்தனை புத்திமதிங்க இருக்கே எல்லாம் முட்டாள்தனமானதா?''

''இரண்டும் கெட்டானுக்குப் புத்திமதி வேணும். வலிக்கிற போது கத்தறவனுக்கு அறிவுரை வேணும். புத்தி உள்ளவன் வாழற போதும் கத்த மாட்டான். வலிக்கிற போதும் கத்த மாட்டான்.''

''இப்ப நீங்க இங்கே வந்தது, புத்தி சொல்லத்தானே?''

''இல்லீங்க. எனக்கு எந்தப் பிரச்னையும் இல்லை. கஷ்டப்பட வேணாம் எனக்காகன்னு சொல்றதுக்கு.''

''நான் உங்ககிட்ட ஆஸ்பத்திரியில அப்படிச் சொல்லியிருந்தால் உங்களுக்கே கஷ்டமாயிருக்காதா? நம்ம இரண்டு பேர்கிட்டயும் சாவித்திரி சொல்லியிருந்தா தலைகுனிவாப் போயிருக்காதா?''

''என்ன தலைகுனிவு இதுல...? சரின்னு நான் பாட்டுக்குப் போயிருப்பேன். நீங்க என்ன ஆயிருப்பீங்கன்னு எனக்குத் தெரியாது. உதவி கேட்டதை — வாங்கறதைத் தவறா நினைச்சுக்கிறதுலதான் உடனே நன்றி செய்துடணும்ங்கிற தடுமாற்றம் வருது. நன்றி மனுஷனை ஒண்ணாக்கற விஷயம் இல்லை. இரண்டாப் பிரிக்கிற விஷயம்.''

''உதவி கேட்க மாட்டீங்களா, யாரையும்?''

''என்னங்க இது? தாராளமாக் கேட்பேன். உங்களையே கேட்டிருக்கேன். வனிதாவுக்கு ஹெல்ப் பண்ணுங்கன்னு வந்து ரிக்வெஸ்ட் பண்ணியிருக்கேன். ஏன்னா என்னால அதைச் சரி செய்ய முடியாது. அதுக்கு நன்றியா உங்களுக்குச் செய்யலை பானுமதி. அதுக்காக ஹாஸ்பிடலுக்கு ஓடி வரலை. 'உதவி வேணுமா?'ன்னு கேட்டேன். ஆமான்னீங்க. உடனே இறங்கினேன். நிறையப் பேர் வார்த்தையைக் கேட்டுட்டு மாட்டிக்கிட்டோமோன்னு உள்ளே புழுங்குவான். நான் புழுங்கறதில்லை. வெளிப்படையாப் பேசிடறது.''

''என்ன வயசு?''

''ஏன்?''

''இதை எல்லாம் எங்கே கத்துக்கிட்டீங்க?''

''தெருவுல. சைக்கிள் ரிக்ஷால பேரல் ஏத்திப்பேன். சின்னப்பையன். முக்கி முனகித் தூக்குவேன். எவனாவது கைவண்டிக்காரன் நின்னு ஏத்திட்டுப் போவான். 'டாங்க்ஸ் பா'ன்னுவேன். பதில் சொல்ல மாட்டான். ஒருத்தன் கேட்டான். நீ சொன்ன வார்த்தையை வச்சுக்கிட்டு என்ன பண்றது? எதுக்கு வீணா சலாம் போடறே? வேற வண்டில எவனாவது சரக்கு ஏத்தறதுக்குத் திணறினான்னா நின்னு தூக்கி விட்டுட்டுப் போன்னான். திணறிக்கிட்டிருக்கிற இடத்துல தூக்கி நிறுத்திட்டுப் போவேன். அவ்வளவுதான்.''

''டெக் எப்பத் தரணும்?''

''நாளைக்குக் காலைல.''

''ஏன் இரண்டு நாள் இருக்கட்டுமே?''

''இல்லீங்க. நாளைக்கு வேற ஒருத்தருக்கு ப்ராமிஸ் பண்ணியிருக்கேன்.''

''நான் முட்டாள்னு படுதா?''

''பட்டாப் பேசவே மாட்டேன். உங்களுக்குப் புரியும்னு எனக்குத் தெரிஞ்சதைச் சொல்றேன். வாழ்க்கைல நாம நிறையக் கஷ்டப்பட்டிருக்கோம். மத்தவங்களுக்கு உதவி செய்யறதுதான் இனிமே நம்ம வேலைன்னு எங்கேயாவது திரும்பிடப் போறீங்க!''

''ஏன் இப்படிச் சொல்றீங்க?''

''சாவித்திரிக்கு ஹெல்ப் பண்ணினதுல ரொம்பக் கர்வம் உங்களுக்கு.''

''எப்படித் தெரிஞ்சுது?''

''முகத்துல எழுதி ஒட்டியிருக்கு. வேற யாரும் சொல்லலை, நான்தான் செய்தேன்னு. யாராவது செய்திருப்பாங்க பானுமதி. யாராவது சாதாரணமாச் செய்திருப்பாங்க. நீங்களும் சாதாரணமா எடுத்துக்கணும். உதவி செய்யறது எத்தனை சந்தோஷம்னு மாட்டாதீங்க.''

''வேற எப்படி இருக்கிறது?''

''உங்களுக்கு எது சந்தோஷமோ, எப்ப சந்தோஷமோ, எப்ப வசதியோ அப்பச் செய்யுங்க!''

''எனக்கு இப்பச் ச ந் தோ ஷ மா இருக்கு!''

''நல்லது.''

''ஒரு காரியம் செ ய் ய ணு ம் னு தோணுது.''

''என்ன?''

''ஒரு நல்ல காப்பி போட்டு உங்களுக்குத் தரணும்னு.''

''ஏன்?''

''இன்னிக்கு ஒரு விஷயம் எனக்குள்ளே கேட்ட கேள்விக்கு நீங்க பதில் கொடுத்தீங்க. அதுக்கு.''

''குடுங்க, சாப்பிடறேன்.''

தட்டென்று உட்கார்ந்தான். பானுமதி உள்ளே ஓடினாள்.

(தொடரும்)





**NAVAJEEVAN SOCIAL WELFARE CENTRE**
**KAMAKSHI KALYANA MANDAPAM, RING ROAD**
**KANCHI SHANKAR MUTH. PO. TIRUMALA 517 504**

# நவஜீவனின் இலவச கூட்டுத் திருமணம் 1990-I
# விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.

## Navajeevan Free Group Marriage Scheme 1990-I
## Applications are Invited

ஸ்ரீ காஞ்சி சங்கராச்சாரியார் ஸ்வாமிகளின் ''ஜன கல்யாண்'' சமூக நல திட்டத்தின் கீழ்'', திருப்பதி திருமலையில் அமைந்துள்ள ஸ்ரீ காஞ்சி காமாக்ஷி கல்யாண மண்டபத்தில் நவஜீவனின் சமூக நல திட்டத்தின் சார்பாக இலவசக் கூட்டுத் திருமணம், வரும் தை மாதம் 27-ம் தேதி 9-2-1990 வெள்ளிக் கிழமை, சர்வ முஹூர்த்த சுப தினத்தன்று ஸ்ரீ காஞ்சி ஆசார்ய ஸ்வாமிகளின் அனுக்கிரஹத்துடனும், கருணை உள்ளம் கொண்ட வாசகர்களின் விசேஷ உதவியுடனும் நடைபெற இருக்கிறது.

### விண்ணப்பம் கோரப்படுகிறது

வரதட்சிணை கொடுமையினால் திருமணம் ஆகாமல் காத்திருக்கும் மிகமிக ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்த பெண்களுக்கு மட்டுமே இந்த இலவச கூட்டு திருமணத்தில் கலந்து கொள்ள வாய்ப்பு அளிக்கப்படும். இந்து மதத்தைச் சேர்ந்த எல்லா பிரிவினர்களும் விண்ணப்பிக்கலாம்.

### முக்கிய நிபந்தனை:-

இந்த இலவச கூட்டு திருமணத்தில் பங்கு கொள்ள விரும்பும் பெண் வீட்டைச் சேர்ந்தவர்கள், தங்கள் பெண்ணுக்கு உகந்த வரனை - மணமகனை - தாங்களாகவே தேர்ந்து எடுத்துக் கொள்ள வேண்டும். மணமகனை தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் நவஜீவன் சேவா கேந்திரம் எந்த நிலையிலும் பொறுப்பு ஏற்காது. மணமகனை நிச்சயித்து இருந்தும் பொருளாதார வசதியின்மை காரணமாக விவாஹத்தை நடத்த இயலாத நிலையில் உள்ள பெண் வீட்டார் மட்டுமே விண்ணப்பிக்கலாம். தை மாதம் 27-ம் தேதி வெள்ளிக் கிழமை சர்வ முஹூர்த்தத்தில் கலந்து கொள்ள இயன்றவர்கள் மட்டுமே விண்ணப்பிக்கவும். 5.1.90 தேதிக்குள் உங்களது விண்ணப்பம் எமது திருமலை அலுவலகத்திற்குச் சேர வேண்டும்.

### தங்கத்தில் திருமாங்கல்யம்:—

நவஜீவனின் சட்ட திட்டங்கள், மற்றும் பொருளாதார நிலைக்கு ஏற்றபடி இலவசத் திருமணத்திற்காக வரும் விண்ணப்பங்களில் இருந்து தேர்ந்தெடுக்கப்படும் பெண்வீட்டாருக்கு மேற்குறிப்பிட்ட திருமண தேதிக்கு 30 நாட்கள் முன்னதாக (Confirmation by Regd Post-ல்) ரிஜிஸ்டர் தபால் மூலம் தெரிவிக்கப்படும். திருமணத்திற்கு தேர்ந்தெடுக்கப்படும் ஒவ்வொரு மணப்பெண்ணிற்கும் தங்கத் திருமாங்கல்யம் வழங்குவதுடன், முஹூர்த்த வஸ்திரங்கள், புரோகிதர், மங்கலப் பொருள்கள் திருமண மண்டபம், சாப்பாடு போன்ற இதர ஏற்பாடுகளையும் ஏற்று சிக்கனமாக திருமணம் செய்து வைக்கப்படும்.

### வெள்ளிக் காசு டாலருடன் திருமாங்கல்ய பிரசாதம்:—

திருப்பதி, திருமலை புண்ய க்ஷேத்திரத்தில் நடக்கவிருக்கும் இந்த கன்னிகாதான சுப முஹூர்த்தத்திற்கு கருணை உள்ளம் கொண்ட வாசக அன்பர்களும் இயன்ற அளவு காணிக்கை அனுப்பலாம். மேற்படி இலவச திருமண செலவிற்காக விசேஷ பரிசாக ரூ.100-க்கு மேல் அனுப்பும் வசதி படைத்த, உயர்ந்த உள்ளம் கொண்ட தம்பதிகளுக்கு ஸ்ரீ பத்மாவதி தாயார் பிரசாதமாக ஒரு ஜோடி திருமாங்கல்ய சரடும், பூஜைக்குரிய ஒரு வெள்ளிக் காசு டாலரும் அனுப்பி வைக்கப்படும். உங்களது டொனேஷனை மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு By Cheque/DD/MO மூலமாக அனுப்ப வேண்டுகிறோம்.

''ஓம் நமோ வெங்கடேஸாய''

**K. R. ACHARYA**
**ORGANISER**



ஒரு பக்கம் சியாமளா. அவளது செங்கதலிக் கன்னம். இன்னொரு பக்கம் நிர்வாக அதிகாரி மாணிக்கவாசகம். அவரது போண்டா விழிகள். இரண்டுக்கும் நடுவில் செக்குப் புண்ணாக்காய்த் திணறினான், ராமானுஜம். நடந்தது என்னவென்றால் —

ஏதோ வேண்டுதலாம்.

திருப்பதிக்குக் கிளம்பினான், ராமானுஜம்.

அவனிடம் லட்டு வாங்கி வரும்படி ஐம்பது ரூபாய் பணம் கொடுத்தார், மாணிக்கவாசகம்.

இருபத்து நான்கு பேர் அடங்கிய செக்ஷனைக் கட்டிக் காக்கும் அதிகாரி ஆயிற்றே. மறுக்க முடியுமா?

"ஆஹா." என்று பணத்தை வாங்கிக் கொண்டான், ராமானுஜம்.

# அந்த ஒரு கணம்

தமிழினியன்



ஆனால், மாணிக்கவாசகம் ரொம்ப கெட்டி.

''சுமைக்குப் பயந்து மறந்துட்டேன்னு வந்து நிற்கக் கூடாதுப்பா'' என்று எச்சரிக்கையும் கொடுத்திருந்தார்.

ராமானுஜம் மறக்கவில்லை. விசுவாசம் மிக்கவனாக —

இன்னி இன்னியாய் எட்டு லட்டுகள் வாங்கி வந்திருந்தான்.

அவன் நல்ல காலமோ, கெட்ட காலமோ தெரியவில்லை.

பெட்டி, பைகள் சகிதம் அவன் வீட்டுக்குள் நுழைந்த போது —

சியாமளா வந்திருந்தாள்.

தீபாவளிக்கு அறிமுகமான புது மாதிரி டிசைன் சேலையில் எங்கோ கல்யாணத்துக்குப் போனாளாம். திரும்பும் வழியில் இங்கே நுழைந்திருக்கிறாள், ராமானுஜத்தின் அம்மாவைப் பார்த்துப் போகலாம் என்று.

வருங்கால அத்[illegible] அல்லவா.

ஆமாம்; ராமானுஜத்துக்கு அவள் உறவுப் பெண். தவிர, இரண்டு பேருக்கும் ஒரு 'இது..' அதற்கு இருதரப்பிலும் சம்மதமும் கிடைத்திருந்தது.

அனேகமாய் வரும் தை மாதத்தில் முகூர்த்தம் நிச்சயமாகி விடும்.

நிற்க —

வீட்டுக்கு வந்த சியாமளா சும்மா இருக்கப் படாதோ.

''ராம் எனக்கு என்ன வாங்கி வந்திருக்கு?'' என்று ராமானுஜம் கொண்டு வந்த பெட்டியைக் குடைந்தாள், அவள்.

'லட்டு' பொட்டலத்தைப் பார்த்ததும், லட்டுப் போல் ஆயிற்று சியாமளாவின்



முகம்.

"அத்தை... அத்தை... இங்கு பார்த்தீங்களா. உங்கள் பிள்ளை திருப்பதிக்குப் போனது தெரிந்தால் லட்டு வாங்கி வரச் சொல்லி இருப்பேனே' என்று அங்கலாய்த்தேன். ஆனால், அவர்... என் மனசை அப்படியே புரிஞ்சுகண்டு எனக்கு லட்டு வாங்கி வந்திருக்கிறார் அத்தை..." தரையில் கால் பாவாமல் குதித்துக் கொண்டே, "இல்லையா, ராம்!" என்றாள், சியாமளா.

தேனடை உடைந்து காதில் கொட்டியது போல் இருந்தது, ராமானுஜத்துக்கு.

அவள் கேட்ட விதம், பார்த்த தோரணை, கன்னங்களில் குமிழியிட்ட புன்னகை... கணப்பொழுதில் அவனுக்கு சகலமும் மறந்து விட்டது.

"ஆமாம், சியாம்... எல்லாம் உனக்குத்தான். எடுத்துக் கொள்," என்று தாராளம் பண்ணி விட்டான்.

மறுகணமே, "தாங்ஸ், ராம். வர்றேன், அத்தை!" என லட்டுப் பொட்டலங்களுடன் ஓடிப் போனாள், சியாமளா.

பிறகுதான் அவன் மரமண்டைக்கு உறைத்தது. 'லட்டு, மாணிக்கவாசகம் சாருக்கு வாங்கியதாயிற்றே!'

கொடுத்ததைத் திருப்பிக் கேட்கவா முடியும்?

இராத்திரி முழுக்கத் தூக்கம் வராமல் அவதிப்பட்டான், ராமானுஜம்.

மறுநாள்.

பயமோ அல்லது பிரயாண அலைசலோ தெரியவில்லை. அவனுக்குக் காய்ச்சல். ஆபீஸ் போக முடியவில்லை.

இரண்டாம் நாள் போன போது, "வா, ராமானுஜம்... உன்னை நேற்றே எதிர்பார்த்தேன்," என்று தமது காரியாலய அறையில் பிரமாதமாய் வரவேற்றார், மாணிக்கவாசகம்.

"நேற்று உடம்பு சுகமில்லை, சார்" என்றான், ராமானுஜம்.

"அடப்பாவமே" என்று சூள் கொட்டியவர், "நேற்று முழுக்க 'லட்டு எங்கே... எங்கே' என்று குழந்தைகள் என்னைப் பிய்த்து எடுத்து விட்டார்கள்..." என்று விவகாரத்தை முடுக்கினார்.

"அப்..படியா... சார்?"

"அவர்களுக்கு என் மீது அவநம்பிக்கை. நேற்று நீ ஆபீசுக்கு வரவில்லை என்று நான் சொன்னதை அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. நான் உன்னிடம் லட்டுக்குப் பணம் கொடுத்து அனுப்பியதே அவர்களுக்குப் பொய்யாகி விட்டது..."

"ஓ..."

"இன்னிக்கும் நீ வரலேன்னா... நானே உன் வீட்டுக்கு வருவதாக இருந்தேன். லட்டு இல்லாமல் நான் இன்னிக்கு வீட்டுக்குள்ளே நுழையவே முடியாது. நல்ல வேளைக்கு நீ வந்துட்டே."

அவ்வளவுதான். மறுகணம் —

"என்னை மன்னிச்சுடுங்க, சார்..." என்று உடைந்து போனான், ராமானுஜம்.



# எண்ணிப் பாருங்கள்–இன்னும் பத்து ஆண்டுகளில் இவர்கள் எப்படி இருப்பார்கள் என்று.

நீங்களே பெருமிதப்படக்கூடிய வகையில் ஆரோக்கியத்தின் சின்னமாக இவர்கள் திகழக்கூடும். ஏனெனில் தாய் என்ற முறையில் உங்களால் முடிந்த எல்லாவற்றையும் இவர்களின் ஒளிமயமான எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு நீங்கள் செய்து கொண்டிருக்கின்றீர்கள்.

நீங்கள் காட்டும் அன்பின் முக்கிய அம்சமே இவர்களின் உடல் நலனுக்கு உகந்த ஊட்டச்சத்துகளை முழுமையாகப் பெற்றுத் தருவதுதானே.

ஹார்லிக்ஸ் அளிக்கும் ஊட்டச்சத்து. இவர்களின் வளரும் வயதுக்கேற்ற ஊட்டச் சத்து.



"ஹார்லிக்ஸில் அடங்கியுள்ள முக்கிய ஊட்டச்சத்துகள்–புரோட்டீன்ஸ், விட்டமின்ஸ், மினரல்ஸ் மற்றும் கார்போஹைட்ரேட்ஸ் ஆரோக்கியத்திற்கும், வளர்ச்சிக்கும் மிக உகந்தவை.

இதில் சேர்க்கப்பட்டுள்ள கூடுதல் கால்ஷியம் வலுவான பற்களுக்கும், ஆரோக்கியமான எலும்புகளுக்கும் இன்றியமையாதது.

வளரும் குழந்தையின் வயதுக்கேற்ற தெம்பும், முழுமையான ஆரோக்கியமும் அளிக்கவல்லது."




**சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்**

HTA 6223 TAM

"ஏன்... என்ன ஆச்சு?" – பிரிக்கப்பட்ட கோப்பு, அவரை அறியாமல் மூடிக் கொண்டது.

"உங்களுக்காக வாங்கி வந்த லட்டை... லட்டை..."

"பயப்படாமல் சும்மா சொல்லு ராமானுஜம். லட்டு என்னவாச்சு?"

பயம்.

கடமையிலிருந்து தவறி விட்டோமே என்னும் குற்ற உணர்வு.

எல்லாம் சேர்ந்த நடுக்கத்துடன், "வந்து... வந்து..." லட்டுக்கு நேர்ந்த கதியைச் சொல்லி முடித்தான், ராமானுஜம்.

மாணிக்கவாசகத்திடம் பதிலைக் காணோம்.

அவர் முகத்தில் கடுகு வெடிக்குமோ, கார் மேகம் சூழ்ந்திருக்குமோ...

நிமிர்ந்து பார்க்கப் பயந்தவனாய்த் தயங்கித் தயங்கி மெள்ள நிமிர்ந்தான், ராமானுஜம்.

ஆச்சரியம்.

மாணிக்கவாசகத்தின் முகத்தில் அழகாய், இயல்பாய் ஒரு புன்னகை தவழ்ந்தது.

"யூ ஆர் மார்வலஸ் ராமானுஜம்" என்றார், அவர்.

ராமானுஜத்துக்கு உள்ளூர உதைப்பு. 'இவர் நிஜமாகப் பேசுகிறாரா.. இல்லை கிண்டலா?'

"ஆச்சரியமாய் இருக்கிறதா" என்று மீண்டும் ஒரு புன்னகை. சொன்னார்:

"அதாவது ராமானுஜம். எனக்கு அந்த லட்டைக் கொண்டு வந்து கொடுத்திருந்தால் அது ரொட்டீன்.. சாதாரண விஷயம். ஆனால், அந்த லட்டை உன் சியாமளாவுக்குக் கொடுத்திருக்கிறாய், பார். அது ஒண்டர்ஃபுல். தனது வருங்காலக் கணவன் தனக்கு விருப்பமானதைச் சொல்லாமலே வாங்கி வந்ததாக நினைத்துப் பூரித்திருப்பாள், அவள். இல்லையா? அதிலுள்ள அன்பின் ஆழத்தை எண்ணி நெகிழ்ந்திருப்பாள்."

ராமானுஜம், டென்ஷன் குறைந்து அவரை விசித்திரமாகப் பார்த்தான்.

"இம்மாதிரி சின்னச் சின்னச் சந்தோஷங்கள்தான் ஆரம்ப கால வாழ்க்கையின் அஸ்திவாரம். அதற்கு என்னுடைய லட்டு உதவியாக அமைந்ததை நினைக்கிற போது மனசுக்கு ரொம்பத் திருப்தியாய் இருக்கிறது, ராமானுஜம்."

அவன் பிரமித்தான். "சார்... நீங்கள்..."

"அதிகாரிதான். ஆனாலும் பிறர் மனசைப் பெரிதாய் மதிக்கும் மனிதன்..." சிரித்தார், அவர்.

அந்த மாணிக்கவாசகங்களில் குளிர்ந்து போய் நின்றான், ராமானுஜம்.

## அருள்வாக்கு



தர்மம் க்ஷீணித்தபோது என்ன ஆகும்? ஸத்துக்களான ஜனங்கள் ரக்ஷணையில்லாமல் தவிப்பார்கள். துஷ்டர்களிடம் ஸாதுக்கள் சிக்கிக் கொண்டு கஷ்டப்படுவார்கள். இந்த ஸத்துக்களை ரக்ஷிக்க வேண்டும், அந்த துஷ்டர்களைச் சிக்ஷிக்க வேண்டும் என்று பரமாத்மா நினைப்பார்: "பரித்ராணாய ஸாதுநாம், விநாசாய ச துஷ்க்ருதாம்:" ஸாதுக்களை நன்றாகக் கட்டிக் காப்பாற்ற வேண்டும், துஷ்டர்களை அழித்து ஸம்ஹாரம் பண்ண வேண்டும் என்று பகவான் நினைப்பார்.

இது ஏதோ அப்போதைக்குப் பண்ணின கார்யமாக முடிந்து போய்விடக் கூடாது. அப்புறமும் கொஞ்சம் நீண்ட காலத்திற்கு லோகத்தில் தர்மம் நன்றாக ஸ்தாபிதமாயிருந்து, ஸாதுக்கள் நிம்மதியாக வாழும்படியாகவும் துஷ்டர்கள் தலை ஓங்காதபடியும் செய்ய வேண்டும். சைதில்யம் அடைந்த தர்மம் லோகத்தில் எந்நாளும் நலியாமல் ப்ரகாசித்துக் கொண்டிருக்கும்படி பண்ணுவதற்கில்லைதான். எதிரெதிர் சக்திகள் – Pair Of Opposites என்பவை போராடிக் கொண்டு மாறி மாறி மேலுக்கும் கீழுக்கும் போவதில்தான் லோக நாடகமே இருக்கிறது. ஆனாலும் ஸ்ருஷ்டியின் விசித்திரப் போக்கில் இது ஸமபலப் போராட்டமாக இல்லாமல் அஸுரமான (அஸுரத்தனமான) அதர்மத்திற்கே ஜாஸ்தி ஆளுகை கொடுத்து விடுவதால் நாடகரஸம் போய் விரஸமாகி விடுகிறது. இந்த மாதிரி ரொம்பவும் முற்றிப் போகும்போதுதான் அவதாரம் எடுத்துச் சீர்ப்படுத்துவது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.



# பொன்னியின் செல்வன்

### அத்தியாயம் 45

## "விடை கொடுங்கள்!"

பெரிய பழுவேட்டரையரின் கோப வெறி நந்தினிக்கு எந்தவிதமான வியப்பையும் உண்டாக்கியதாகத் தெரியவில்லை. மூன்று ஆண்டு காலமாக அந்த மகா வீரரான முதுகிழவரை அவள் கையில் பிடித்த கயிற்றின் நுனியில் ஆடும் பாவையைப் போல் ஆட்டி வைத்துக் கொண்டிருந்தாள். முதன் முதலாக, இன்றைக்கு அந்தக் கயிறு அறுந்து விட்டது. ஆட்டி வைத்தபடி ஆடிக் கொண்டிருந்த பாவை உயிரும் சுய அறிவும் பெற்று விட்டது. இதை நந்தினி எதிர்பார்த்தவளாகவே தோன்றியது. இனி அந்தப் பாவையினால் அவளுக்கு ஆக வேண்டிய காரியமும் ஒன்றுமில்லை.

சிறிதும் பதற்றம் காட்டாமல் நந்தினி எழுந்து பெரிய பழுவேட்டரையரின் முன்னால் நமஸ்கரித்தாள். உணர்ச்சி மிகுதியினால் தழுதழுத்திருந்த குரலில் அவள் கூறினாள்:—

"சுவாமி! என்னுடைய வார்த்தைகள் தங்களுக்குத் தேனையும் தேவாமிருதத்தையும் விட இனிப்பதாகப் பலமுறை சொல்லியிருக்கிறீர்கள். ஆனால் இன்றைக்கு நான் கொடுத்த கஞ்சியைப் போலவே என் வார்த்தைகளும் தங்களுக்கு நஞ்சினும் கசப்பாயிருக்கும். ஆயினும், கருணை கூர்ந்து தங்களிடம் நான் இறுதி விடைபெறுவதற்கு முன்னால் சில வார்த்தைகள் சொல்ல அனுமதி கொடுங்கள். அருமைக் கண்மணி என்றும், ஆசைக் காதலி என்றும் என்னை அழைத்த வாயினால் இன்று பாதகி என்றும், ராட்சஸி என்றும் அழைத்தீர்கள். நான் பாதகிதான்; ராட்சஸிதான்! மூன்று வருஷமாகத் தங்களை வஞ்சித்து ஏமாற்றி வந்தேன். வனாந்தரத்தில் அநாதையாக நின்ற என்னை அழைத்து வந்து அரண்மனையில் வைத்தீர்கள். பேரரசிகளும் இளவரசிகளும் எனக்கு மரியாதை செய்யப் பண்ணினீர்கள். தங்கள் உயிருக்குயிரான சின்னப் பழுவேட்டரையரிடம் விரோதித்துக் கொள்ளவும் துணிந்தீர்கள். நாட்டு மக்களும் நகர மக்களும் கூறிய பழிச் சொற்களும் பரிகாஸப் பேச்சுக்களும் தாங்கள் என்னிடம் கொண்டிருந்த அபிமானத்தைப் பாதிக்க முடியவில்லை. இப்படியெல்லாம் என்னிடம் நம்பிக்கை வைத்து இணையில்லாச் சிறப்புக்கள் அளித்த தங்களை நான் வஞ்சித்து வந்தேன்; அது உண்மைதான். என்னுடைய நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காகவே தங்கள் அரண்மனை

**அமரர் கல்கி**

யில் வசித்து வந்தேன். தங்களுக்குத் தெரியாமல் பல காரியங்களைச் செய்து வந்தேன். சதிகாரர்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டிருந்தேன். கந்தமாறன் — பார்த்திபேந்திரன் போன்ற வாலிபர்களின் மதியை மயக்கி அவர்களை என் காரியத்துக்கு உபயோகப்படுத்திக் கொண்டேன். ஆனால், ஐயா, ஒரே ஒரு காரியத்தில் மட்டும் தங்களை நான் வஞ்சிக்கவில்லை. தங்களை உலகமறிய மணந்த நாளிலிருந்து தங்களையே என் பதியாகக் கொண்டிருந்தேன். தலைமுறை தலைமுறையாக மகா வீரர்களை அளித்து வந்த தங்கள் பழம் பெரும் குலத்துக்கு என்னுடைய ஒழுக்கத் தவறினால் சிறிதும் களங்கம் ஏற்படவில்லை. இனியும் நான் உயிரோடிருந்தால் அத்தகைய களங்கம் தங்களுக்கு ஒரு நாளும் ஏற்படாது....''

''நந்தினி! இது என்ன வார்த்தை சொல்லுகிறாய்? என் குலத்துக்கு இனி ஏற்படக் கூடிய களங்கம் வேறு என்ன இருக்கிறது? ஐயோ! என் கையினால்... இந்த என் கையினால்... அடிபாவி! வாள் ஒன்று வைத்திருந்தாயே? அது எங்கே? அதனால் என் கையை நீயே வெட்டி விடு! எனக்கு நீ செய்யக்கூடிய உதவி அது ஒன்றுதான்!... இல்லை, இல்லை! வேண்டாம்! இந்தக் கைக்கு இன்னும் ஒரு வேலை இருக்கிறது; மிக முக்கியமான வேலை இருக்கிறது. நான் கூறியதை உண்மை என்று நினைத்து அப்படி ஏதாவது செய்து விடாதே!....''

''சுவாமி! அப்படியொன்றும் நான் செய்ய மாட்டேன். எத்தனையோ காலமாக நான் பழி முடிக்க எண்ணி இருந்தவரின் பேரிலேயே அந்த வாளை என்னால் உபயோகிக்க முடியவில்லை. சமயம் நழுவிப் போய் விடுமோ என்று நான் பயந்து மதி மருண்டிருந்த நேரத்தில் தாங்கள் என் உதவிக்கு வந்தீர்கள்.....''

''அடி பாதகி! உன் உதவிக்கா நான் வந்தேன்? என்ன வார்த்தை சொல்லுகிறாய்? சண்டாளி! பெண் உருக்கொண்ட பேயே! இம்மாதிரி நேரும் என்று தெரிந்திருந்தால் நான் அங்கு வந்திருக்கவே மாட்டேன்! தெய்வமே! கொள்ளிடத்து வெள்ளத்திலே நான் முழுகித் தத்தளித்தபோதே அந்தப் பாவி யமன் என்னைக் கொண்டு போயிருக்கக் கூடாதா?''

''சுவாமி! தாங்கள் என் உதவிக்கு வரவில்லை. என் காரியத்தில் தங்களை உதவி செய்யும்படி நான் கோரவும் இல்லை. தாங்கள் சோழ மன்னர் குலத்துக்கு உண்மையாக நடக்கவும், சோழ குலத்தின் சேவையில் உயிரைக் கொடுக்கவும் பரம்பரையாக உறுதி பூண்ட குலத்தில் வந்தவர். நானோ சோழ குலத்தின் மீது வஞ்சம் தீர்த்துக் கொள்வதற்காக வந்தவள். ஆகையாலேயே தங்களிடம் என் உண்மை நோக்கத்தை நான் தெரிவிக்கவில்லை. சில சமயம் நான் அவ்விதம் தங்கள் மூலம் என் காரியத்தை நிறைவேற்றிக் கொள்ளலாமா என்று எண்ணியதுண்டு. யோசித்துப் பாருங்கள்! தாங்கள் இன்று 'ராட்சஸி' என்றும், 'பெண் உருக் கொண்ட பேய்' என்றும் அழைக்கும் இந்தப் பேதையின் முக சௌந்தரியத்தில் கண்ணையும் கருத்தையும் கொடுத்து அபரிமிதமாக மதுபானம் செய்தவரைப் போல் மதியிழந்து பல தடவை தாங்கள் நின்றதில்லையா? அப்போதெல்லாம் தங்களைக் கொண்டே என் வஞ்சத்தைத் தீர்த்துக் கொண்டால் என்ன என்று நான் நினைத்ததுண்டு. ஆனால் தங்களை அப்படிப்பட்ட துரோகச் செயல் புரியும்படி செய்து தங்கள் குலத்துக்குக் களங்கம் உண்டாக்க நான் விரும்பவில்லை. இதனாலேயே தங்களைக் கடம்பூரிலிருந்து தஞ்சைக்குப் போகச் செய்வதற்கு நான் அவ்வளவு பாடுபட்டேன். தாங்களும் போனீர்கள். ஆனால் விதியானது தங்களைச் சமயம் பார்த்துத் திரும்பிக் கொண்டு வந்து விட்டது! தாங்களாக எனக்கு உதவி செய்ய முன்வரவில்லை. ஆனால் விதியானது தங்களை என் உதவிக்கு நல்ல சமயத்தில் கொண்டு வந்து சேர்த்தது! ஆம், ஐயா! விதிதான் தங்கள் மனத்தில் என் ஒழுக்கத்தைப் பற்றிச் சந்தேகத்தை மூட்டியது. நான் பழி முடிப்பதைத் தடுப்பது மட்டும் தங்கள் நோக்கமாயிருந்தால், பகிரங்கமாகவே வந்திருப்பீர்கள். நான் ஒழுக்கத் தவறு செய்து தங்களுக்குத் துரோகம் செய்கிறேனா என்று சந்தேகப்பட்டுத்தான் வேஷம் தரித்து இரகசிய வழியில் வந்தீர்கள்... அந்த விஷயத்திலாவது தங்கள் சந்தேகம் தீர்ந்து போயிருக்க வேண்டும்! இல்லாவிடில், இப்போதாவது தீர்த்துக் கொள்ளுங்கள். மனைவியும், கணவனும் வாழ்க்கைத் துணைவர்கள் என்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். நான் தங்களுக்கு உண்மையான பத்தினியாக இருந்தபடியால்தான் எனக்குத் துணை செய்வதற்குத் தக்க சமயத்தில் தங்களை விதி கொண்டு வந்து என்னிடம் சேர்த்தது.....''

''நந்தினி! போதும்! நிறுத்து! உன் வார்த்தைகள் என்னைச் சித்திரவதை செய்கின்றன. அதைக் காட்டிலும், என்னை ஒரேயடியாகக் கொன்று போட்டு விடு! தடுப்பதற்குக் கூட என் கையில் சக்தி இல்லை; உடம்பிலும் வலிவு இல்லை. வாளினால் கொல்ல உனக்குத் தைரியம் இல்லையென்றால், உண்மையாகவே கஞ்சியில் விஷத்தைக்

கலந்து எனக்குக் கொடுத்து விடு!''

''அரசே! என்னை மன்னியுங்கள்! இல்லை..... என்னை உங்களால் மன்னிக்க முடியாது. இந்த ஜன்மத்தில் மன்னிக்க இயலாதுதான்! ஒன்று சொல்கிறேன், கேளுங்கள்! நாம் இருவரும் மறு ஜன்மம் எடுத்து இந்தப் பூமியில் பிறந்தால், அப்போது இந்தப் பிறவியின் நினைவு ஒன்றும் நமக்கு இராது. நான் தங்களை வஞ்சித்துத் தங்கள் அரண்மனையில் வாழ்ந்ததும், தங்களுடைய பொக்கிஷத்தின் பொருளை என்னுடைய பழி முடிக்கும் காரியத்துக்கு உபயோகப்படுத்தியதும், கடைசியாகக் கடம்பூர் அரண்மனையில் விதி வசத்தினால் நேர்ந்த விளைவும், இவையொன்றும் தங்களுக்கும் நினைவு இராது; எனக்கும் நினைவு இராது. இந்த ஜன்மத்தில் தங்களுக்கு நான் செய்த துரோகத்துக்கு அடுத்த ஜன்மத்தில் பரிகாரம் செய்ய விரும்புகிறேன். மறு பிறப்பில் நான் தங்களையே மணப்பேன்; தங்களுக்கு உண்மையான வாழ்க்கைத் துணைவியாக இருப்பேன். இந்த வரத்தைத்தான் இனி இந்த உடம்பில் உயிர் இருக்கும் வரையில் எல்லாத் தெய்வங்களிடமும் நான் வேண்டிக் கொள்ளப் போகிறேன்.''

பெரிய பழுவேட்டரையர் இந்த வார்த்தைகளைக் கேட்டு உடலும் உள்ளமும் நெகிழ்ந்து. ''நந்தினி! நீ போய்விடு! உடனே இவ்விடம் விட்டுப் போய் விடு! இன்னும் சிறிது நேரம் இப்படியே நீ பேசிக் கொண்டிருந்தால் என் புத்தியே பேதலித்து விடும்! என் கடமையைக் கைவிடும்படி நேரிடும்! இவ்வளவு காலமும் உன்னால் நேர்ந்த அனர்த்தங்கள் போதும்! இன்னமும் என் புத்தியைச் சிதற அடித்துப் பித்துப் பிடிக்கச் செய்யாதே! போய் விடு. இப்போதே போய் விடு!'' என்றார்.

''சுவாமி! மன்னியுங்கள்! என்னுடன் வந்தவர்களின் யோசனையை நான் கேட்டிருந்தால், இதற்குள்ளே இந்தப் பச்சை மலையையும் கொல்லி மலையையும் கடந்து கொங்கு நாட்டுக்குள் சென்றிருப்போம். ஆனால் தங்களிடம் பேசி விடை பெற்றுக் கொள்ளாமல் போக எனக்கு மனம் வரவில்லை. கடம்பூர் கோட்டைக்கு வெளியிலே வந்ததும் தாங்கள் மூர்ச்சையடைந்தீர்கள். தங்களை அங்கேயே போட்டு விட்டு வந்து விடும்படி அவர்கள் சொன்னார்கள். அதற்கும் நான் சம்மதிக்கவில்லை. அவர்களையே தங்களைத் தூக்கிச் சுமந்து கொண்டு வரச் செய்தேன். இரவு பகல் நாங்கள் இடைவிடாமல் நடந்து வந்தும் மூன்று நாள் ஆகி விட்டது. இங்கே வந்த பிறகும் தங்களை விட்டுப் போய் விடலாம் என்று சொன்னார்கள். தங்களுக்கு நினைவு வந்த பிறகு சொல்லிக் கொண்டுதான் பிரிந்து வருவேன் என்று பிடிவாதம் பிடித்தேன். அந்த என் எண்ணம் நிறைவேறி விட்டது. தாங்கள் என்னைக் கொல்லப் பார்த்தீர்கள். அதற்கு நியாயமும் இருந்தது. ஆனால் விதிவசத்தினால் வேறு விதமாக நடந்து விட்டது. என் உயிரை வாங்க எண்ணிய தங்களை நான் உயிர்ப்பித்தேன். சற்று முன் என் கையால் கொடுத்த கஞ்சியை விஷம் என்று சொல்லி விட்டெறிந்தீர்கள். ஆனால் மூன்று தினங்களாகத் தாங்கள் நினைவிழந்திருந்த காலத்தில் இந்தக் கையினாலேதான் தங்கள் வாயில் தண்ணீர் விட்டுக் காப்பாற்றி வந்தேன். மூன்று ஆண்டுகாலம் தாங்கள் என்னைத் தங்கள் அரண்மனையின் பேரரசியாக வைத்து இணையற்ற பெருமை அளித்து வந்தீர்கள். அதற்குக் கைமாறு இந்த ஜன்மத்தில் நான் செய்ய முடியாது. என்றாலும் இந்த மூன்று நாள் தங்களுக்கு என் கையினால் பணிவிடை செய்யக் கொடுத்து வைத்திருந்தேன். இந்த நினைவு என் உயிர் உள்ள வரையில் எனக்குத் திருப்தி அளித்து வரும். போய் வருகிறேன், ஐயா! விடை கொடுங்கள்!''

''நந்தினி! என்னிடம் ஏன் விடை கேட்கிறாய்? கேட்காமலே போய் விடு! நீ இங்கே தாமதிக்கத் தாமதிக்க, என் புத்தி தடுமாறிக் கொண்டு வரும்!''

''ஆம்; என்னை மறுபடியும் கொல்ல வேண்டும் என்று தங்களுக்குத் தோன்றினாலும் தோன்றி விடும். சுவாமி! தங்கள் கையினால் உயிர் துறக்கும்படி நேர்ந்தால் அதை அடியாள் பெறற்கரும் பாக்கியமாகக் கருதுவேன். ஆயினும் முதலில் என்னைக் கொல்லுவதற்காகத் தானே தாங்கள் மாறுவேடம் பூண்டுவந்தீர்கள்?''

''எதற்காக மாறுவேடம் பூண்டு வந்தேன்? நீ ஏதோ ஒரு காரணம் கூறினாய். உன் ஒழுக்கத்தைச் சந்தேகித்து உண்மையைக் கண்டு பிடிக்க வந்தேன் என்று கூறினாய். அது சரியல்ல. நான் பழுவேட்டரையனாக உன்முன் தோன்றி, நீ இரண்டு வார்த்தை என்னிடம் பேசி விட்டால், என் மனம் இளகி விடும் என்று பயந்துதான் அவ்வாறு வேடம் போட்டுக் கொண்டு இரகசிய வழியில் வந்தேன். உனக்குப் பேசுவதற்கே இடங் கொடாமல் நீ பிரமித்து நிற்கும் போதே உன்மீது கத்தியை எறிந்து கொல்ல எண்ணி வந்தேன். கடம்பூர் அரண்மனை வேலைக்காரன் இடும்பன் காரியைப் பயமுறுத்தி அவன் கையிலிருந்த கத்தியைப் பிடுங்கிக் கொண்டு வந்தேன். அதுமட்டு

மல்ல, நந்தினி! கிழவன் பழுவேட்டரையன் பொறாமை கொண்டு அவனுடைய இளம் மனைவியைக் கொன்றான் என்ற பழிச் சொல் பரவி ஊர் சிரிக்கக் கூடாது என்று நினைத்துக் காளாமுகனுடைய வேடத்துடன் வந்தேன். ஆனால் சற்று முன் நீ கூறியது போல், நான் ஒன்று நினைக்க விதி வேறு ஒன்று நினைத்தது. இனி ஒரு தடவை அத்தகைய முயற்சி என்னால் செய்யவே முடியாது. ஆகையால், நீ போய் விடு! இதை



மட்டும் சொல்லி விட்டுப் போ! அச்சமயம் நான் வந்து குறுக்கிட்டிரா விட்டால், என்ன நடந்திருக்கும்? உன் நோக்கத்தை எப்படி முடிக்க எண்ணியிருந்தாய்?''

''ஆம், ஆம்; அதையும் சொல்ல வேண்டுமென்றுதான் காத்திருந்தேன். தங்கள் கோபம் என் புத்தியையும் குழப்பி விட்டது. சுவாமி! தாங்கள் தஞ்சைக்குப் போகும் போது 'தங்கள் குல தர்மத்துக்கு என் கையினால் களங்கம் நேரிடாது' என்று உறுதி கொடுத்தேன். அதை நிறைவேற்றப் பெரும் பிரயத்தனம் செய்தேன். மணிமேகலை, கந்தமாறன், வந்தியத்தேவன் இவர்களில் ஒருவர் மூலமாக என் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளலாமென்று யுக்திகள் செய்தேன். முக்கியமாக, மணிமேகலையை நான் அதிகமாக நம்பியிருந்தேன். வேறு காரணத்துக்காக அங்கே மறைந்து நின்ற வந்தியத் தேவனைக் கொல்வதற்காகக் கரிகாலர் வெறிகொண்டு ஓடுவார்; அப்போது மணிமேகலை அவரைக் கொல்லுவாள்; மணிமேகலையின் மேல் குற்றம் சாராமலிருப்பதற்காக வந்தியத்தேவன் 'நான் தான் கொன்றேன்!' என்று ஒப்புக் கொள்வான்; அதனால் பழையாறைக் குந்தவையின் பேரில் என் வஞ்சத்தைத் தீர்த்துக் கொண்டதுமாகும்;— இப்படியெல்லாம் திட்டமிட்டிருந்தேன். ஆனால் இதற்கெல்லாம் அவசியம் ஏற்படவே இல்லை. இளவரசர் தம் கையினாலேயே தம் உயிரை மாய்த்துக் கொண்டார்....''

''இல்லை, நந்தினி! இல்லை! கரிகாலர் தம் உயிரைத் தாமே மாய்த்துக்கொள்ளவில்லை. என்னைக் கூடவா ஏமாற்றப் பார்க்கிறாய்?''

''சுவாமி! இடும்பன் காரியின் கத்தியைத் தாங்கள் அச்சமயம் எறிந்திரா விட்டால், அடுத்த கணத்தில் கரிகாலர் தம்மைத் தாமே வீர பாண்டியன் வாளினால் மாய்த்துக் கொண்டிருப்பார்.....''

''ஆம், ஆம்; ஒரு கணம் நான் தாமதித்து வந்திருந்தால் இந்தப் பெரிய துரோகச் செயலைச் செய்திருக்க மாட்டேன். அதற்கு மாறாக, உன்பேரில் சந்தேகப்பட்டிருப்பேன். நந்தினி! விதிப்படி நடந்து விட்டது. இனி அதை மாற்ற முடியாது. விதி ஒரு விதத்தில் எனக்கும் நல்லது செய்திருக்கிறது. இருவரும் இன்னொரு ஜன்மம் எடுத்தால், நீ என்னையே வாழ்க்கைத் துணைவனாய்க் கொள்ள விரும்புவதாய்க் கூறினாயே? அதைக் காட்டிலும் இனிமையான வார்த்தைகளை என் வாழ்நாளில் நான் கேட்டதில்லை. உன்னிடம்கூடக் கேட்டதில்லை. என் ஆவி பிரியும் நேரத்தில் நான் அந்த வார்த்தைகளைத்தான் நினைத்துக் கொண்டு சாவேன். ஆம், நந்தினி! இந்தப் பிறவியில் இனி நீயும் நானும் சேர்ந்து வாழ்க்கை நடத்த முடியாது. ஆகையால் நீ போய் விடு! போவதற்கு முன்னால், நான் ஆத்திரத்தினால் கொட்டியது போகக் கஞ்சி மிச்சமிருந்தால் கொடுத்து விட்டுப் போ! கஞ்சி இல்லாவிட்டால், கொஞ்சம் தண்ணீராவது உன் கையினால் கொடுத்து விட்டுப் போ! நான் முதலில் கூறியதை எல்லாம் மறந்து மன்னித்து விட்டதற்கு அடையாளமாக ஒரு வாய் கஞ்சியாவது, தண்ணீராவது கொடுத்து விட்டுப் போ!'' என்றார் பழுவேட்டரையர்.

''ஆகட்டும், ஐயா! இவ்வளவு கருணை செய்ததற்கு என் உயிர் உள்ள வரைக்கும் நன்றி செலுத்துவேன்!'' என்று நந்தினி கூறிவிட்டு, அடுப்பிலிருந்து கஞ்சி எடுத்து வரச் சென்றாள்!

ஆழ்வார்க்கடியான் அந்தச் சமயம் பார்த்துக் குகையிலிருந்து நழுவிச் செல்ல நினைத்தான். தெரிந்து கொள்ள விரும்பியதையெல்லாம் அவன் தெரிந்து கொண்டு விட்டான். இனி அங்கிருப்பதில் உபயோகம் இல்லை; அபாயமும் உண்டு. இனிமேல் செய்ய வேண்டியதென்ன என்பதைப் பற்றி வெளியிலே போய் யோசித்துக் கொள்ளலாம் என்று எண்ணிக் கொண்டே வெளியேறினான்.

## அத்தியாயம் 46

# ஆழ்வானுக்கு ஆபத்து!




ழ்வார்க்கடியானும் பூங்குழலியும் மலையடிவாரத்து மரத்தினடியில் உட்கார்ந்தார்கள்.

''பெண்ணே! நான் வந்த காரியம் ஆகி விட்டது. புறப்படலாமா?'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''வைஷ்ணவரே! நீர் வந்த காரியம் ஆகி விட்டதென்றால் நீர் போகலாம். நான் வந்த காரியம் இன்னும் பூர்த்தி ஆகவில்லை!'' என்றாள் பூங்குழலி.

''நீ என்ன காரியத்துக்காக வந்தாய்?''

''என் அத்தையைக் கொன்ற பாதகனைத் தேடிக் கொண்டு வந்தேன்.''

''அவனைக் கண்டு பிடிக்கவில்லையா? அதோ அந்தச் சதிகாரரின் கூட்டத்தில்

அவன் இல்லையா?''

''இருக்கிறான்!''

''பின்னே என்ன?''

''அவனைத் தரிசனம் செய்து புண்ணியம் கட்டிக் கொண்டு போவதற்காக வந்தேனா? கொலைக்கு கொலை, பழிக்குப் பழி வாங்குவதற்காக வந்தேன்.''

''பூங்குழலி! குற்றம் செய்தவர்களைத் தண்டிப்பதற்கு நாம் யார்! அதற்குக் கடவுள் இருக்கிறார்!''

''கடவுள் இருக்கிறாரா. இருந்தாலும் மனிதர்களுடைய துரோகச் செயலைத் தண்டிக்கிறாரா என்பது பற்றி எனக்குச் சந்தேகமாயிருக்கிறது.''

''கடவுளை விட்டு விடுவோம். இந்த உலகில் குற்றம் செய்தவர்களைத் தண்டிக்கும்பொறுப்பு அரசர்களுடையது; அரசர்கள் நியமிக்கும் அதிகாரிகள் செய்ய வேண்டியது.''

''அரசர்களும் அவர்களுடைய அதிகாரிகளும் தங்கள் கடமையைச் சரிவரச் செய்யா விட்டால்?''

''செய்யவில்லையென்று நாம் எப்படித் தீர்மானிப்பது?''

''வைஷ்ணவரே! அதோ உள்ள பாதகர்களில் ஒருவன், மேல் மாடியிலிருந்து வேலை எறிந்து அன்பே உருவான என் அத்தையைக் கொன்றான். வாயினால் பேசத் தெரியாதவளும் ஒருவருக்கும் ஒரு தீங்கும் நினையாதவளும் வாழ்க்கையெல்லாம் துர்ப்பாக்கியசாலியாக இருந்தவளுமான ஒரு பேதைப் பெண்ணைக் கொன்றான். சக்கரவர்த்தியும் அவருடைய ராணிமார்களும் தஞ்சைக் கோட்டை அதிகாரியான சின்னப் பழுவேட்டரையரும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆயினும் அவனைத் தப்பி ஓடும்படி விட்டு விட்டார்கள்....''

''பூங்குழலி! சோமன் சாம்பவனைப் பிடிப்பதற்கு யாதொரு முயற்சியும் அவர்கள் செய்ய வில்லையா?''

''வாழ்நாளெல்லாம் என் அத்தையை நிராகரித்த சக்கரவர்த்தி இப்போது அவளை மடியில் போட்டுக் கொண்டு அழுதார். மற்றவர்கள் எல்லாரும் திக்பிரமை கொண்டு நின்றார்கள். 'கொலைகாரனைத் தொடர்ந்து நான் போகிறேன்' என்றதும் சின்னப் பழுவேட்டரையரும் எழுந்து வந்தார். ஆனால்சுரங்கப்பாதையில் அவர் திரும்பிப் போக நேர்ந்தது.''

''அது ஏன்?''

''சுரங்கப் பாதையில் நானும் அவரும் சென்றபோது இருளில் ஓர் ஓலக் குரல் கேட்டது. சின்னப் பழுவேட்டரையர் அந்தக் குரல் வந்த இடத்தை நோக்கிப் பாய்ந்து அங்கே இருந்தவனைப் பிடித்துக் கொண்டார். 'இதோ கொலைகாரன் அகப்பட்டு விட்டான்!' என்று கூவினார். 'இல்லை, இல்லை! நான் கொலை செய்ய வில்லை!' என்று ஒரு குரல் வந்தது. அது யாருடைய குரல் என்பது சின்னப் பழுவேட்டரையருக்குத் தெரிந்ததும் அவர் திகைத்துப் போய், 'ஐயோ? நீர் ஏன் இங்கே வந்தீர்?' என்றார். 'பொக்கிஷமெல்லாம் பத்திரமாக இருக்கிறதா என்று பார்ப்பதற்கு வந்தேன்' என்றது இருளில் வந்த குரல். 'ஐயோ! தெய்வமே! உம்மை இங்கே யாராவது பார்த்தால் என்ன நினைத்துக் கொள்வார்கள்? நீர் அல்லவோ சக்கரவர்த்தியைக் கொல்ல முயன்றதாக எண்ணிக் கொள்வார்கள்?' என்றார் காலாந்தக கண்டர். 'சக்கரவர்த்தி செத்துப் போய் விட்டாரா?' என்று ஆவலுடன் கேட்டார் சின்னப் பழுவேட்டரையருடைய அருமை மருமகரான மதுராந்தகத்தேவர். 'அசட்டுப் பிள்ளையே! என்னுடன் வா! யாரும் பார்ப்பதற்கு முன் வா!' என்று சொல்லிக் காலாந்தக கண்டர் அவருடைய மருமகப் பிள்ளையின் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போய் விட்டார். பிறகு நான் மட்டும் இந்தக் கொலைகாரனைத் தொடர்ந்து வந்தேன். இவ்வளவு தூரம் சிரமப்பட்டு வந்து, என் நோக்கத்தை நிறைவேற்றாமல் திரும்பிப் போகச் சொல்கிறாயா?'' என்றாள் பூங்குழலி.

''பெண்ணே! நீ ஆண் பிள்ளையாகப் பிறந்திருக்க வேண்டியவள். பிறந்திருந்தால் பெரியதொரு சாம்ராஜ்யத்தின் சர்வாதிகாரியாக இருந்திருப்பாய். அது போனால் போகட்டும். இதைக் கேள். ஒரு நியாயம் சொல்லு! ஒருவரைக் கொல்ல நினைத்து இன்னொருவரைத் தற்செயலாகக் கொன்றவன் மீது கொலைக் குற்றம் சாட்ட முடியுமா?''

''உம்முடைய கேள்வி எனக்கு விளங்கவில்லை. கொன்றவன் கொலைக் குற்றம் செய்தவன் தானே?''

''அது எப்படிச் சொல்ல முடியும்? இராமாயணம் கேட்டிருப்பாய். தசரதர் யானை தண்ணீர் குடிப்பதாக நினைத்து அம்பை விட்டார். அது ரிஷி குமாரன் மீது விழுந்தது. ரிஷி குமாரனைக் கொன்ற கொலைக் குற்றத்துக்காகத் தசரதர் தண்டிக்கப்பட்டாரா? இல்லை! இப்போது நீ தொடர்ந்து வந்த சோமன் சாம்பவனை எடுத்துக் கொள். அவன் சக்கரவர்த்தியைக் கொல்வதற்காக வேலை எறிந்தான். ஆனால் சக்கரவர்த்தி உயிரோடிருக்கிறார். உன் அத்தை குறுக்கே வந்து வேலைத் தாங்கி உயிரைவிட்டாள். அவள் தற்கொலை செய்து கொண்டவள் தானே? பின், சோமன் சாம்பவன் மீது

கொலைக் குற்றம் எப்படிச் சேரும்?''

''வைஷ்ணவரே! உம்முடைய நீதி முறை அதிசயமாக இருக்கிறது....''

''என்னுடைய நீதி முறை மட்டும் அல்ல. சர்வலோக நாயகனான சாக்ஷாத் நாராயண மூர்த்தியின் நீதி முறையே விசித்திரமாகத் தான் இருக்கிறது. இந்த உலகில் பாவம் செய்கிறவர்கள் செழிப்புடன் இருக்கிறார்கள். நல்லவர்கள் — புண்ணியாத்மாக்கள் — கஷ்டப் பட்டு உயிரை விடுகிறார்கள். இதற்கெல்லாம் கடவுளுடைய நியாயம் ஏதோ இருக்கத்தானே வேண்டும்.''

''நீரும் உம்முடைய நாராயணனும் எப்படியாவது போங்கள். எனக்குத் தெரிந்த நியாயத்தை நான் நிறைவேற்றி விட்டுத் தான் வருவேன்.''

''பூங்குழலி! உனக்காக மட்டும் நான் இந்தப் பேச்சை எடுக்கவில்லை. அதோ அந்த மலைக் குகையில் இரண்டு பேர் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் ஆதித்த கரிகாலரைக் கொன்றவர். ஆனால் கரிகாலரைக் கொல்ல வேணுமென்று நினைத்துக் கொல்லவில்லை. வேறொருவரைக் கொல்ல நினைத்து எறிந்த கத்தி இளவரசரின் பேரில் விழுந்து அவரைக் கொன்று விட்டது. அவரைக் கொலைகாரர் என்று சொல்ல முடியுமா?''

''வைஷ்ணவரே! என் மூளையைக் குழப்ப வேண்டாம். மலைக் குகைக்குள் இருப்பவர்கள் யார்?''

''சோழ சாம்ராஜ்யத்தின் தனாதிகாரி, தஞ்சை அரண்மனையின் சர்வாதிகாரி, இருபத்தி நான்கு போர்க்களங்களில் போரிட்டு அறுபத்து நாலு விழுப் புண்களைத் தம் திருமேனியில் சுமந்திருக்கும் வீராதிவீரர், இறை விதிக்கும் தேவர், குறுநில மன்னர் குழுவின் மாபெரும் தலைவர், நந்தினி தேவியின் கணவர் — பெரிய பழுவேட்டரையர் அந்த மலைக் குகையில் வீற்றிருக்கிறார்.....!''



வ்வாறு ஆழ்வார்க்கடியான் பெருங் குரலில் கட்டியம் கூறுவது போல் கூறினான். அதே சமயத்தில் ரவிதாஸன், ரேவதாஸன், பரமேசுவரன், சோமன் சாம்பவன் முதலியவர்கள் திடு திடு வென்று ஓடி வந்தார்கள். பூங்குழலி சட்டென்று அப்பால் விலகி நின்றாள். வந்தவர்கள் ஆழ்வார்க்கடியானைச் சூழ்ந்து கொண்டார்கள். ரவிதாஸன் கையில் குறுந் தடி ஒன்று இருந்தது. அதை ஓங்கிய வண்ணம் ரவிதாஸன், ''அடே வேஷதாரி வைஷ்ணவனே! அன்பில் அநிருத்தனின் ஒற்றனே! கடைசியில் எங்களிடம் அகப்பட்டுக் கொண்டாயா? நாங்கள் செய்த மூன்று முயற்சியில் ஒன்றிலேதான் வெற்றி அடைந்தோம். மற்ற இரண்டிலும் தோல்வி அடைந்தோம். அந்தத் தோல்விகளைப் பற்றி எங்களுக்கு இனிக் கவலை இல்லை. மூன்று ஆண்டுகளாகத் தேடிக் கொண்டிருந்த உன்னைப் பிடித்து விட்டோமல்லவா? இந்தத் தடவை நீ எங்களிடமிருந்து தப்ப முடியாது!'' என்றான்.

உடனே ஆழ்வார்க்கடியான், முன்னைவிட உரத்த குரலில், ''அப்பனே! தேடுகிறவன் யார்? தப்பி ஓடுகிறவன் யார்? எல்லாரும் அந்த சாக்ஷாத் நாராயண மூர்த்தியின் குமாரர்கள்தான்! அவனன்றி ஓரணுவும் இந்த உலகில் அசையுமா? ரவிதாஸா! நீயும் கேள்! உன்னைச் சேர்ந்தவர்களும் கேட்கட்டும். வேறு வேறு சில்லறைத் தெய்வங்களையெல்லாம் விட்டு விட்டு சாக்ஷாத் மகா விஷ்ணுவைச் சரணமடையுங்கள்! பகவான் உங்களுடைய பாவங்களையெல்லாம் மன்னித்துக் காப்பாற்றுவார்! மானிடர்களுக்காக உழைத்து வாழ்க்கையை வீணாக்கி மடிந்து போகாதீர்கள். நாராயணனைத் தொழுது நரஜன்மம் எடுத்ததன் பலனை அடையுங்கள். பரம பதத்தில் உங்களுக்கு இடந் தேடிக் கொள்ளுங்கள்! எங்கே? என்னுடன் சேர்ந்து எல்லாரும் பாடுங்கள், பார்க்கலாம்:—

''நாராயணனே தெய்வம் —
நாமெல்லோரும் துதிசெய்வம்!''

என்று பாடத் தொடங்கினான்.

''இருபது வருஷங்களுக்கப்புறம் இப்பத்தான் உன் சமையல்லே மாறுதல் தெரியுது...''

''அப்படியா?''

''ஆமாம். முன்னேயெல்லாம் கறுப்பு முடி கிடைக்கும். இப்ப வெள்ளை முடி கிடைக்கிறது!''

— குமார்.





விட்டுக்காரர்: என்னப்பா இது... பத்து நாளைக்கு முன்னாடி ஊரில போட்ட போஸ்ட் கார்டை இப்பக் கொண்டு வந்து தர்றே?

போஸ்ட்மேன்: கார்டைப் படிக்கப் பார்த்தேன்...அப்படிஒண்ணும்முக்கியமான விஷயமாத் தெரியலை... அதனால தான்!''

— வி. கி. குமார்.



விதாஸன் கல கலவென்று சிரித்து விட்டு, ''ஏனப்பா, வைஷ்ணவனே? சாக்ஷாத் பரம சிவன் மட்டும் தெய்வம் இல்லையா? பரமசிவனைத் துதித்தால் பரம பதம் கிட்டாதா?'' என்றான்.

ஆழ்வார்க்கடியான் உற்சாகத்துடன்; ''பரமசிவன் அழிக்கும் தெய்வம்! நாராயணன்தான் காக்கும் தெய்வம்! அன்று முதலை வாயில் அகப்பட்டுக் கொண்டு தவித்த கஜ ராஜனை எங்கள் நாராயண மூர்த்தி காப்பாற்றியதை மறந்து விட்டீர்களா?'' என்றான்.

''அப்பனே! கஜராஜனைக் காப்பாற்றிய விஷ்ணுபகவான் முதலையைக் கொல்லத் தானே செய்தார்? அதுபோலவே இராவணன், கும்பகர்ணன், இரணியாட்சன், இரணியகசிபு, சிசுபாலன், தந்தவக்கிரன் ஆகியவர்களை உங்கள் மகாவிஷ்ணு அழித்துப் போடவில்லையா?'' என்றான் ரவிதாஸன்.

''எங்கள் பெருமாளின் கையால் வதையுண்டவர்களும்சாக்ஷாத்ஸ்ரீவைகுண்டத்தை அடைவார்கள். இரணியனையும் இராவணனையும் சிசுபாலனையும் கொன்ற பிறகு அவர்களுக்குப் பகவான் வைகுண்ட பதவியை அளித்தார். உங்கள் பரமசிவனோ திரிபுரர்களை ஒரேயடியாக நெற்றிக் கண்ணால் எரித்து அழித்துப் போட்டார். அவர்களுக்கு மோட்சத்தைக் கொடுத்தாரா?''

''சரி! சரி! உன் கதையை நிறுத்து! உன்னுடைய நாராயணன் இப்போது உன்னை வந்து காப்பாற்றட்டும்!'' என்று சொல்லிக் கொண்டே ரவிதாஸன் தன் கையிலிருந்த குறுந்தடியை ஓங்கினான்.



ந்தச் சமயம் பூங்குழலி அவனுக்கு உதவி செய்ய விரும்பி இடுப்பில் செருகியிருந்த கத்தியை எடுத்தாள். அதே நேரத்தில் மலைக் குகையிலிருந்து தலைவிரி கோலமாக ஒரு பெண்ணுருவம் ஓடி வருவதைப் பார்த்தாள். ஒரு கண நேரம் அவளைத் தன் அத்தை மந்தாகினி என்று எண்ணிப் பிரமித்து நின்றாள். பின்னர், 'இல்லை, இவள் பழுவூர் ராணி நந்தினி' என்று தெளிந்தாள்.

இதற்குள் நந்தினி ஆழ்வார்க்கடியான் அருகில் வந்து விட்டாள். ரவிதாஸனுடைய ஓங்கிய கைத்தடியைத் தன் கரங்களினால் தடுத்து நிறுத்தினாள்.

''வேண்டாம்! என் சகோதரனை ஒன்றும் செய்யாதீர்கள்! ரவிதாஸா! நான் உங்கள் ராணி என்பது உண்மையானால், தடியைக் கீழே போடு!'' என்றாள்.

ஆழ்வார்க்கடியான் அப்போது, ''சகோதரி! உனக்கு நன்றி. ஆனால் இவர்களால் எனக்கு எந்தவிதத் தீங்கும் செய்திருக்க முடியாது. நான் வணங்கும் தெய்வமாகிய நாராயண மூர்த்தி என்னைக் காப்பாற்றியிருப்பார்!'' என்றான்.

ரவிதாஸன் சிரித்து விட்டு, ''எப்படிக் காப்பாற்றியிருப்பார்? அன்றைக்குப் பிரஹலாதனைக் காப்பாற்றத் தூணிலிருந்து வந்ததுபோல் இன்று இந்த மரத்தைப் பிளந்து கொண்டு நாராயண மூர்த்தி வந்திருப்பாரா?'' என்றான்.

''மந்திரவாதி! என் பேச்சில் உனக்கு நம்பிக்கை இல்லையா? நல்லது! அதோ பார்! சற்றுத் தூரத்தில் தெரியும் அய்யனார் கோவிலைப் பார்! அந்தக் கோயிலுக்கு முன்னால் மண் குதிரைகள் இருக்கின்றன அல்லவா? ஸ்ரீமந் நாராயணனுடைய கருணையினால் அந்த மண் குதிரைகள் உயிர் பெற்று விடும்! அவற்றின் பேரில் வேல் பிடித்த வீரர்கள் ஏறிக் கொண்டு வந்து உங்களைச் சிறைப் பிடித்து என்னைக் காப்பாற்றுவார்கள்!''

ஆழ்வார்க்கடியான் மேற்கண்டவாறு சொல்லிக் கொண்டே கையினால் சுட்டிக் காட்டியதிக்கை அனைவரும்நோக்கினார்கள். தங்கள் கண்களை நம்ப முடியாமல் திண்டாடிப் போனார்கள்! ஏனெனில், அந்த மண் குதிரைகள் உண்மையாகவே உயிர் பெற்று அவர்களை நோக்கிப் பாய்ந்து ஓடி வந்ததாக அவர்களுக்குத் தோன்றியது. ஒவ்வொரு குதிரையின் பேரிலும் வேல் பிடித்த வீரன் ஒருவன் உட்கார்ந்திருந்தான்!

(தொடரும்)

# ஸுப்பர் பாதுகாப்பு




## கொசுக்களை ஒழித்திட குட் நைட் ஒன்றுதான் சர்வதேச SP வாக்குறுதி தருவது.

ஜப்பான் நாட்டு சுமிட்டோமோ
விலிருந்து இறக்குமதி பெற்ற
இரசாயனப் பொருள்கள் மற்றும்
உள்-உறுப்புக்கள், என்றும் மாறாத
நிலைநிறுத்தப்படும் சர்வதேச நிர்ணயத் தரங்கள்.

இவற்றுக்கெல்லாம் அங்கீகாரமாக குட்
நைட்டுக்கு, பெருமதிப்புமிக்க **SP** முத்திரை
வழங்கப்பட்டது : தரத்தின் சின்னமாக, உலகில்
**மிகச் சிலவற்றுக்கே அளிக்கப்பட்ட விருது.
இதனை இந்தியாவில் வென்றுள்ளது குட்
நைட் ஒன்றுதான்.**

**சுமிட்டோமோவின் கறாரான சர்வதேச
நிர்ணயத் தரங்களுக்கு இணங்க,
சுமிட்டோமோ பைரத்ராயிடு** கொண்டு
தயாரிக்கப் பட்டது குட் நைட் என்பதற்கு
உத்தரவாத முத்திரை எஸ்பி.

ஆகவேதான், மிகப்பல மக்கள் கொசுக்களுக்கு
''குட் நைட்'' போட்டு விடை கொடுக்கின்றனர்.
அவர்களுக்குத் தெரியும் ஸுப்பர் பாதுகாப்புக்கு
நம்பிக்கையானது குட் நைட்.




# குட் நைட்




**SP** என்றால்
சுமிட்டோமோ பைரத்ராயிடு.

இனிய தூக்கம் இன்பக்கனவு
யாவருக்கும் குட் நைட்

முப்பது வருடங்களுக்குப் பிறகு, கோபாலரத்னம் தாம் பிறந்து வளர்ந்த கிராமத்திற்குப் போகலாமா, வேண்டாமா என யோசனை செய்ய வேண்டிய ஒரு சூழ்நிலைக்குத் தள்ளப்பட்டிருந்தார்.

இத்தனை நாட்களாகக் கால்களில் சக்கரம் கட்டிக் கொண்டு, ஊர் ஊராக, நாடு நாடாக அலைந்தாயிற்று. வேண்டிய பணமும் சேர்த்தாயிற்று. யாருக்காக இத்தனையும் சேர்த்தாரோ, அவர்கள் எவருக்குமே அது பயன்படாமல், வங்கிகளில் டெபாஸிட்டாகவும், இரும்புப் பெட்டியில் பங்குப் பத்திரங்களாகவும் தூங்கிக் கொண்டிருந்தன.

நான்கு வருடங்களுக்கு முன், கனடாவிலிருந்து புறப்பட்ட அந்த விமானம், அவர் மனைவி, இரு பிள்ளைகள், மற்றும் ஒரு பெண் அடங்கிய குடும்பத்தோடு விபத்துக்குள்ளாகி வெடித்துச் சிதறி, மொத்தமாக விண்வெளிக்கு ஏற்றி விட்டிருந்தது.

கோபாலரத்னம் துயரத்தால் துவண்டு விடவில்லை. மறக்க முடியாத அந்த மாபெரும் சோகத்தைத் தம் நினைவிலிருந்து அகற்ற, இன்னும் அதிக நேரம் தம் பணிகளில் செலவிட்டார். பணமும், சொத்தும் இன்னும் ஏகத்திற்குச் சேர்ந்தன.

வயது ஐம்பத்தெட்டாகி விட்டது. உடலளவில், மனத்தளவில் அவர் தொடர்ந்து பணியாற்றத் தயார்தான்.




இருந்தாலும் நிறுவனத்தின் விதிமுறைகள் அடுத்து இருந்தவரின் எதிர்பார்ப்புகள் இவற்றுக்கும் மதிப்புத் தரப்பட வேண்டுமல்லவா?

கோபாலரத்னம் ஓய்வு பெற்று விட்டார்.

பிரும்மாண்டமான பங்களா. கூப்பிட்ட குரலுக்கு ஓடி வர எத்தனையோ வேலைக்காரர்கள் இருந்தும், யாரிடமும் உண்மையான அன்பும், விசுவாசமும் இல்லை போலத் தெரிந்தது. எல்லோருமே உதட்டளவில் பேசுவதாக, நடிப்பதாகப்பட்டது.

வெளியே சுற்றுவது அலுத்துப் போய், வீட்டில் உட்கார்ந்து 'வீடியோ'வில் படங்கள் பார்த்தார். 'டேப்-ரிகார்டரி'ல் பாட்டுக் கேட்டார். எல்லாமே ஒரே மாதத்தில் கசந்து போயிற்று. தன்னை யாரோ நகர முடியாமல் கட்டிப் போட்டு நிறுத்தியது போல் இருந்தது.

எல்லாமே வெறுத்துப் போய்த் தன் வாழ்க்கையையே முடித்துக் கொண்டு விடலாமா என்று கூடத் தோன்றியது. ஒரு நாள் இரவு, ஒரு புட்டி தூக்க மாத்திரைகளை விழுங்கி விடும் நோக்கத்துடன் கையில் எடுத்தார். கடைசி நிமிடத்தில் என்ன தோன்றியதோ, திருப்பி வைத்து விட்டார்.

அருண் ஸக்ஸேனா கோபாலரத்னத்தின் நண்பர். அவர் கூடவே வேலை பார்த்து அவர் கூடவே ஓய்வு பெற்றவர். கோபாலரத்னம் டில்லியிலேயே தங்கி விட, அருண் தன் சொந்த ஊரான பாட்னாவிற்குப் புறப்பட்டுப் போய் விட்டார். டில்லியில் ஒரு கல்யாணத்திற்கு வந்த அருண், கோபாலரத்னத்தைப் பார்க்க வந்தார்.

கோபாலரத்னம் தன் நண்பனிடம் தம் மனத்தைத் திறந்து காட்டினார்.

"என்னைச் சுற்றிலும் மனிதர்கள் இருக்கிறார்கள், அருண். ஆனால் யாருமே என் இதயத்தைத் தொடவில்லையே. ஒரு தனிமை உணர்வு. ஏதோ தீவில் விடப்பட்டது போன்ற பிரமை என்னை வாட்டுகிறது. எத்தனை மணி நேரம்தான் படிப்பேன்? எத்தனை மணி நேரம்தான் தூங்குவேன்...? எவ்வளவு தூரம்தான் நடப்பேன்! அருண்! நீ சீக்கிரத்தில் பேப்பரில் படிக்கத்தான் போகிறாய். என் மரணச் செய்தியை. ஒருமுறை கையில் எடுத்த தூக்க மாத்திரையைக் கீழே வைத்து விட்டேன். மறுபடி எடுக்க மாட்டேன் என்றோ, எடுத்தால் திருப்பி வைப்பேன் என்றோ நம்பிக்கை எனக்கில்லை!"

"நோ! நோ! கோபால்... உனக்கு வேண்டியது வேலை. உன் மூளைக்கு வேலை. எங்கேயாவது மறுபடி வேலை பார்க்கப் போயேன். உன் திறமைக்குச் சலாம் போட்டுக் கொண்டு கூப்பிடுவார்கள்.

"வேண்டாம்... வேண்டாம்... இன்னும் சம்பாதித்து நான் யாருக்குச் சேர்த்து வைக்கப் போகிறேன்...? அது மட்டும் இல்லை. இதுவரை ஒரு தலைமைப் பதவியில் இருந்து மற்றவரை வேலை வாங்கிப் பழக்கம் ஆகி விட்டது. எத்தனை லட்சம் கொட்டிக் கொடுத்தாலும் இன்னொருவர் கீழே வேலை செய்வது என்பது என்னால் முடியாத காரியம்."

அருண் யோசித்தார்.

"அப்படியானால் நீ ஏன் மறுபடி ஒரு கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது?" எனக் கேட்டார் அவர்.

"என்னை என்னவென்று நினைத்தாய்?" — எனக் கோபப்பட்டார் கோபாலரத்னம்.

"இதில் என்ன தப்பு இருக்கிறது கோபால்? உன்னை நான் ஓர் இருபது வயசுக் குமரியைக் கல்யாணம் செய்து கொள்



ளச் சொல்லவில்லை. வயதான ஒரு 'டிவோர்ஸி'. பிக்கல் பிடுங்கல் இல்லாத ஒரு விதவை. பஸ்ஸைத் தவற விட்ட பயணியைப் போல், வசந்தத்தில் மணம் முடிக்க இயலாமல் போன ஒரு கன்னி. இப்படி.''

கோபாலரத்னம் யோசித்தார். நீ சொல்கிறபடி ஒரு பெண் கிடைப்பாளா?''

''எனக்குத் தெரிந்த புரொபஸர் ஒருவர் இருக்கிறார். டில்லியில்தான். பெயர் சுபத்ரா. பெங்களூர்ப் பக்கம். வயது கிட்டத்தட்ட ஐம்பது இருக்கும். இது கல்யாணத்தைத் தவற விட்ட கேஸ். வீட்டிற்கு மூத்த பெண். சின்ன வயதிலேயே அப்பா போய் விட்டார். வரிசையாகத் தம்பி, தங்கைகள். கடைசித் தங்கைக்கும் கல்யாணத்தை முடித்து விட்டு நிமிர்ந்த போது, இவள் வயது முப்பத்தைந்தைத் தாண்டி விட்டது. இப்போது உன்னைப் போலத்தான் இருக்கிறாள். கூடப் பிறந்தவர்கள் உதாசீனப் படுத்துகிறார்கள் என நான் சொல்ல வில்லை. அவரவர் குடும்பம் பெருகி விட்டது. பொறுப்புகள் கூடி விட்டன. தங்கள் அக்காவை நினைத்துப் பார்க்கக் கூட அவர்களுக்கு எப்போதாவதுதான் நேரம் கிடைக்கிறது. மனம் விட்டுப் பேச ஆள் இல்லை. உன்னைப் போலவே....'' என்றார் அருண்.

கோபாலரத்னம் சிந்தனையில் மூழ்கினார்.

முன்பின் தெரியாத ஒரு பெண்மணியுடன், புதிதாக வாழ்க்கை தொடங்குவதற்குப் பதில் கிராமத்திற்குப் போய்த் தம் உறவினர்கள் யாருடனாவது தங்கினால் என்ன? செலவிற்குப் பணம் தாராளமாகக் கொடுத்து விட்டால் போயிற்று. ரத்த பந்தம் ஆயிற்றே? விட்டா போகும்?

தம் எண்ணங்களை அருணிடம் வெளியிட்டார்.

அருண் நீண்ட பெருமூச்சு ஒன்றை உதிர்த்தார். ''உம்... நீ இன்னும் உலகத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. போகட்டும். உன் இஷ்டப்படியே செய்து பார். ஊரில் உனக்கு யார் யார் உறவினர்கள்

இருக்கிறார்கள்?''

''என் சித்தப்பா சுந்தரம். ஊரில் இருக்கும் என் சொத்துக்களை அதாவது, பூர்விக சொத்துக்களை என் சார்பில் பார்த்துக் கொள்ளும் சாக்கில் அனுபவித்துக் கொண்டு இருக்கிறார். அப்புறம் என் தமக்கை பிள்ளை கோவிந்தன். ஏதோ பிஸினஸ் செய்கிறான். என் மாமா முத்து சாமி. குடும்பத்தில் எல்லோருக்கும் பெரியவர். புரோகிதர். நல்ல வேத வித்து.''

''யூ மீன்... பண்டிட்ஜி!'' — என விளக்கம் கேட்டார் அருண் ஸக்ஸேனா.

''ஆமாம். அப்புறம் சிதம்பரம். என் மைத்துனன். மனைவியின் தம்பி. பெரிய பண்ணையார். அரசியலில் செல்வாக்கு உண்டு.''

''அப்புறம்?''

''வேறு யாரும் நெருங்கின உறவினர்கள் இல்லை.''

''சரி. இந்த நான்கு பேருக்கும் உன் எஞ்சிய காலத்தை அவர்களுடன் கழிக்கப் போவதாகவும், அவர்கள் பதில் பார்த்துப் புறப்பட்டு வருவதாகவும் எழுதிப் போடு.''

''சரி.''

ஒரு மாதம் கழித்து, பாட்னாவில் அருண் ஸக்ஸேனா தம் வீட்டு வாசலில் இருந்த செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்த போது, டாக்ஸி ஒன்று வந்து நின்றது. அதிலிருந்து இறங்கியவர் கோபாலரத்னம்.

''அரே ரே: ஆய்யா வா...'' என உற்சாகத்துடன் வரவேற்றார் அருண். அவர் மனைவி யமுனாவும் முகமெல்லாம் மலர உபசரித்தாள்.

பகல் உணவெல்லாம் முடிந்து தனி அறையில் அமர்ந்த பிறகு, கோபாலரத்னம் தமக்கு வந்த பதில்களை எடுத்து ஸக்ஸேனாவிடம் கொடுத்தார்.

''உன் சொந்தக்காரர்கள் எழுதியதா? எனக்குத் தமிழ் வராதே! என்னிடம் கொடுத்தால் எப்படி?'' எனக் கேட்டார் அருண்.

''ஒருவர்தான் தமிழில் எழுதியிருக்கிறார். மற்றவர்கள் எல்லாம் ஆங்கிலத்தில்தான் பதில் அனுப்பியிருக்கிறார்கள். நீயே படித்துக் கொள்ளலாம்.''

முதல் கடிதம் சிதம்பரம் எழுதியது.

கிராமத்தில் தங்க வசதியான இடம் இல்லையாம். நிலம் வைத்திருப்பவர்களெல்லாம் வந்த விலைக்கு விற்று விட்டுப் பட்டணத்தைப் பார்க்கப் போய் விட்டானாம். தானே நேரடியாக விவசாயத்தைக் கவனித்தால்தான் பணம் பார்க்க முடிகிறதாம். ஒருகால், கோபாலரத்னம் வரத் தீர்மானித்தால், அவர் தங்கப் பக்கத்து நகரத்து லாட்ஜ் ஒன்றில் படு சுமாராக ஒரு அறை ஏற்பாடு செய்வதாக எழுதியிருந்தான்.

''ஆக மொத்தம் உன்னை வர வேண்டாம் என்கிறான், இல்லையா?'' என்ற அருண், அடுத்த கடிதத்தைப் படிக்க ஆரம்பித்தார்.

இது யார் கோவிந்தன்...? உன் மருமான்? உனக்குப் புதிதாக வீடே வாங்கித் தருவதாகச் சொல்கிறான். பலே பலே. நான்கு லட்சம் பெறுமானம் உள்ள வீட்டை உனக்கு மூன்று லட்சத்திற்கு முடித்துக் கொடுக்கிறானாமா...? லாபம்தான். அப்புறம் டெல்லியில் தன் ஏஜென்ஸி விஷயமா யாரையோ பார்க்கச் சொல்லியிருக்கிறானே..''

''உம்.. உம்... எல்லாம் பிஸினஸ்தான்... அந்த வீட்டு விற்பனையில் இவனுக்கு எவ்வளவு கமிஷனோ?''

''ஆமாம்.''

''தன் கம்பெனி விலாசம் அச்சடிக்கப்

# குட்டத் தயங்காத நட்பு!



ஆரம்பத்தில் காங்கிரஸிலிருந்த எல். கே. அத்வானி, பிறகு ஜனசங்கத்திற்கு வந்தார். ஜனசங்கம் ஜனதாவில் இணைந்த போதும் இவரும் மற்ற சிலரும் ஆர். எஸ். எஸ். இயக்கத்தில் உறுப்பினராகவே இருந்தனர். ஒரே சமயத்தில் இரண்டு இயக்கங்களில் உறுப்பினர்களாக இருக்கக் கூடாது என்ற பிரச்னை எழுந்தது. அதை மதுலிமாயி பெரிதுபடுத்தினார். ஆயினும் அத்வானி, வாஜ்பாயி போன்றவர்கள் ஆர். எஸ். எஸ். உறுப்பினர் பொறுப்பிலிருந்து விலகத் தயாராக இல்லை. அதன் காரணமாக, ஜனதாவிலிருந்து வெளியேறி, பாரதிய ஜனதாவைத் துவக்கினார்கள். பி. ஜே. பிக்கு வாஜ்பாயி ஒரு கண் என்றால் அத்வானி மற்றொரு கண். இன்றைய தேசிய முன்னணி அமைச்சரவைக்கு பி. ஜே. பி. தரும் ஆதரவு, தவறு நேர்ந்தால் நட்புரிமையுடன் குட்டத் தயங்காத ஆதரவு!

## புரட்சிகர முஸ்லீம் தலைவர்!



அலி கார் முஸ்லிம் பல்கலைக் கழகத்தில் படித்த ஆரிப் முகமதுகான். படிக்கிற காலத்தில் மாணவர் தலைவராக இருந்தவர். அப்போதே இஸ்லாமிய மதத்தில் சீர்திருத்தம் தேவை என்று பேசிப் பழமைப் போக்குக் கொண்ட மதவாதிகளுக்கு அதிர்ச்சியளித்தவர். காங்கிரஸிலிருந்து ஜனதாவுக்கு வந்தார். உ. பி.யில் முன்பிருந்த ஜனதா அமைச்சரவையில் அமைச்சராக இருந்தார். இவர் அமைச்சரான போது இருபத்தைந்தே வயது! உ. பி. யில் இந்து – முஸ்லிம் கலவரம் நடந்தபோது. அதை அரசியல் ஆதாயம் கருதி. ஜனதா அரசு கண்டுகொள்ளாமல் இருந்தது. அது தவறு என்று கடுமையாக விமர்சித்த இவர். அமைச்சர் பதவியை ராஜினாமாச் செய்து விட்டுக் காங்கிரஸுக்கு வந்தார். மத்தியில் அமைச்சரானார். ஷா பானு வழக்கில் ராஜீவ் காந்தி அடித்த அந்தர் பல்டியால் மனம் நொந்து. – கோபப்பட்டு மத்திய அமைச்சர் பதவியையும் எம்.பி. பதவியையும் தூக்கியெறிந்தார். இப்போதைய மத்திய அமைச்சரவையில் மீண்டுமொரு இவர் வசம்!

பட்ட கவரில், யாரிடமோ 'டிக்டேட்' செய்து கடிதத்தை 'டைப்' அடித்து அனுப்பியிருக்கிறான்.''

''எதையுமே வியாபாரமாகத்தான் பார்ப்பான் போலிருக்கிறது. அவனைப் பொறுத்தவரையில் நீ ஒரு ''பிஸினஸ்'' பார்ட்டி... காரியம் ஆகிற வரையில் குழைகிற ஜாதி. அப்புறம் உன்னைக் கறிவேப்பிலைக் கொத்து போல் தூக்கி எறிந்து விடுவான்.''

மூன்றாவது கடிதம் சுந்தரம் எழுதியது. அருண் படித்து முடியும் வரை கோபாலரத்னம் பொறுமையாகக் காத்திருந்தார்.

''என்ன எழுதியிருக்கிறான், பார்த்தாயா? நான் வருவதில் அவனுக்குத் திருப்தியோ, சந்தோஷமோ இருப்பதாக ஒரு வரி இல்லை. இத்தனை நாள் பாடுபட்ட அவனுக்கு, நான் வந்தவுடன் பூர்வீகச் சொத்தை மாற்றிக் கொடுத்தால் நன்றாக இருக்குமாம். அந்தச் சொத்து என்ற தூண்டில் இல்லாமல் இருந்தால், நிச்சயம் பதிலே போட்டிருக்க மாட்டான்.''

''யாரையும் திட்டாதே. பிரச்னையை அவன் பக்கத்திலிருந்து பார். அதிலும் ஒரு நியாயம் இருக்கும். ஆமாம். அது யார் கடிதம்? பென்சிலால் எழுதியிருக்கிறார்.''

''என் மாமா முத்துசாமி. தமிழில்தான் எழுதியிருக்கிறார். நான் அதை உனக்கு ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துச் சொல்கிறேன்...''

''சிரஞ்சீவி கோபாலரத்னத்திற்கு என் ஆசீர்வாதம். உன் கடிதம் கிடைத்தது. இது உன் வீடு. என்றைக்கும் உன் வீடு. இங்கே வருவதற்கு நீ கடிதம் போட்டுக் கேட்க வேண்டுமா என்ன? உடனே புறப்பட்டு வா! பரமேசுவரன் உன்னை ரட்சிக்கட்டும்! – உன் அன்புள்ள மாமா, முத்துசாமி.''

இதைப் படிக்கக் கேட்ட ஸக்ஸேனாவின் கண்களில் கூட நீர் கோத்துக் கொண்டிருந்தது.

''உன் சொந்தக்காரர்களில் இவர் ஒருவர் தான் மனிதராகத் தெரிகிறார்...'' என்றார் மனம் திறந்து.

''ஆமாம், அருண். இந்தக் கடிதத்தைப் பார்க்கும் போது எனக்கு என் தாயார் ஞாபகம் வந்தது. கண்ணிற்குப் புலப்படாத இரண்டு கரங்கள் என்னைப் பாசத்துடன் அணைப்பது போல இருந்தது. என்னை மடியில் கிடத்தி நெற்றியை வருடி விடும் இதம் புரிந்தது. ஆனாலும் நான் அங்கே போய்த் தங்க முடியாது. எனக்குப் பழக்கப்பட்ட வசதிகள் கொஞ்சமும் அங்கே இல்லை. அவர்கள் இயலாமையை அவர்களுக்கு நான் அப்படிக் காட்டுவது ரொம்பவும் மோசமான செயல்...''

''அது மட்டுமில்லை கோபால். உன் மாமா நல்லவர்தான். ஆனால் அவர் உன்னைப் பார்த்ததில்லை. உன்னுடன் பழகியதில்லை. பார்த்துப், பழகிய மற்ற மூன்று பேர் எப்படி இருக்கிறார்கள் என்பதை நீயே புரிந்து கொண்டு விட்டாய். இவர்கள் உன்னை எப்படி ஏற்றுக் கொள்வார்கள்? முப்பது வருடம் என்பது ஒரு பெரிய தலைமுறை அளவிற்கான இடைவெளி.''

''ஆமாம் அருண். உறவு என நினைத்தவர்கள் எல்லாம் அந்நியப்பட்டுப் போய் நிற்கிறார்கள். அதனால் நீ சொன்னபடி அந்நியத்தில் புதிதாக ஓர் உறவை உருவாக்க ஏன் முயலக் கூடாது...? நீ என்னுடன் டில்லிக்கு வர முடியுமா?''

''கட்டாயம். அதற்கு முன் மேடம் சுபத்ராவுடன் நான் ஒரு வார்த்தை பேசி விடுகிறேன்'' என டெலிபோனைத் தம் பக்கம் இழுத்தார் அருண்.



# தடைகளைத் தாண்டி

# முன்னேறுங்கள்

நம்மிடம் ஒருவர் ஆங்கிலத்தில் பேசினால் நாமும் அவர்களிடம் ஆங்கிலத்தில் சரளமாகப் பேச வேண்டும் என்று விரும்புகிறோம். ஆனால் ஒரு சிலர் ஆங்கிலத்தில் பேசத்தயங்குகிறார்கள்.

இத்தயக்கம் ஏன் ஏற்படுகிறது?

உதாரணமாக நாம் ஒரு விளையாட்டுப் போட்டியில் பங்கு பெற விரும்புகிறோம். அப் போட்டியில் வெற்றிபெற வேண்டுமெனில், அவ்விளையாட்டில் நாம் பயிற்சி பெற்றிருப்பது அவசியமல்லவா?

அதுபோலவே நாம் ஆங்கிலத்தில் சரளமாகப் பேச முறையான பயிற்சி முறை அவசியமாகிறது. போதிய பயிற்சியின்மையினால் தான் நாம் ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ, என்ற தயக்கம் ஏற்படுகிறது.

ஆங்கிலத்தில் சரளமாகப் பேச வேண்டும், வாழ்க்கையில் முன்னேற வேண்டும், என்ற நமது விருப்பத்தை தயக்கம் என்ற முட்டுக் கட்டை தடை செய்கிறதென்றால், இத்தடையைத் தாண்டித்தான் ஆகவேண்டும். இத் தடையைத் தாண்டுவது மிகவும் எளிது.

உங்களிடமுள்ள இத் தயக்கத்தை முதலில் நீக்கி, நீங்கள் ஆங்கிலத்தில் சரளமாகப் பேசவும், இலக்கணப் பிழை ஏற்பட்டு விடுமோ என்று பயப்படாமல் கடிதங்கள் கட்டுரைகள் எழுதும் ஆற்றலை அடையவும், தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப் புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்த படியே ஓய்வுநேரத்தில் தபால் மூலம் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம். "நேர்முகப் பயிற்சியும் உண்டு"

இப்பயிற்சியில் சேர்ந்து பயன் பெற விரும்புவோர் கீழ்கண்ட முகவரியில் இன்றே தொடர்பு கொள்ளவும்.

விவேகானந்தா கல்வி நிலையம்
த. பெ. எண். 4986
9, மேட்லிரோடு
தி. நகர்
சென்னை - 600 017.

NAGA

# மூட்டு வலியா? போக்கிடுங்கள் மூவ் மூலம்.




## முழங்கால் மூட்டு வலியா? பின்புற மூட்டு வலியா?

உங்கள் உடலின் மூட்டுகள், குறிப்பாக முழங்கால்களிலும் பின்புறமும் வயதானாலோ அல்லது கடின செயல்களினாலோ, இவை வலி ஏற்படும் இடங்களாக விளங்குகின்றன. மூட்டுகளில் லூப்ரிகேட்டிங் திரவம் சுரப்பது குறைவதனால், அதில் உராய்வு ஏற்பட்டு, வலிக்கவும் அசௌகரியத்திற்கும் காரணமாகிறது.

## ஆழ ஊடுருவிச் செல்வது

மூவில் மிக அடர்த்தியான விரைவில் ஆவியாகிற இயற்கை எண்ணெய் அடங்கியுள்ளது. அது சருமத்தின் ஊடே மூட்டுவலி ஏற்படுத்தும் பாகம்வரை ஆழமாக ஊடுருவிச் செல்கிறது.

## விரைந்து செயலாற்றுவது

மூவிலுள்ள இயற்கையான எண்ணெய், அதிக வீரியம் வாய்ந்த நிவாரண சாறுகளைக் கொண்டது — உடனடியாக இரத்த ஓட்டத்தை அதிகரிக்கச் செய்து, லூப்ரிகேட்டிங் திரவத்தை மீட்டுப் பெற்றுத் தந்து, விரைவாக நிவாரணம் அளிக்கிறது.

## நீடித்து செயலாற்றுவது

மூவைத் தடவியதும், இதன் ஒப்பற்ற விதம் ஃபார்முலேட் செய்த 'பேஸ்' இயற்கையான எண்ணெயைத் தொடர்ந்து செலுத்தி, வலிக்கும் இடத்தை நீண்ட நேரம் இளஞ் சூடாகவும், பிசுபிசுப்பாகவும் விளங்கச் செய்கிறது. இது சருமத்தில் எரிச்சலை உண்டுபண்ணுவதில்லை. வலியற்ற இயக்கத்தை மீண்டும் பெறுகிறீர்கள். நீங்கள் மீண்டும் பழையபடியே ஓடியாடி வேலை செய்யலாம்.

**உண்மையாகவே உடனடி நிவாரணம்**

# மூவ்

மூட்டு வலி நிவாரணி



PARAS PHARMACEUTICALS PVT. LTD.
Jeendra Chambers, Ashram Road, AHMEDABAD 380 014

Interact: PPPL:169 : Tam.




மேலோட்டமாய்ப் பார்க்கும் போது இதுவும் ஒரு மசாலாப் படம்தான். ஆனால் வழக்கமானதுகளுக்கு ஏதோ வித்தியாசம் தட்டுகிறதே என்று ஆழத்துக்குப் போனால் தான் தெரிகிறது. இயக்குநர், ஒலி, ஒளிப்பதிவாளர்கள் போன்ற அடிப்படைச் சூத்திரதாரிகள் பிலிம் இன்ஸ்டிட்டியூட்டிலிருந்து இறக்குமதியான இளைஞர்கள் என்பது.

கதாநாயகனுக்கு இரட்டை இலட்சியங்கள். ஒன்று தன் குத்துச் சண்டை வாத்தியாரின் காலை வாங்கிய எதிரியை அவர் சொன்ன விதமாய்ப் பழிவாங்க வேண்டும். இன்னொன்று, தன்னைக் காதலித்துக் கல்யாணம் பண்ணிக் கொண்ட பிறகு, தன்னைச் சந்தேகப்பட்டுப் பிரிந்து போய் விட்டாளே, அவளிடம் தான் நிரபராதி என்பதை நிரூபிக்க வேண்டும். இந்த இரண்டும் கை கூடும் போது வெற்றி மேல் வெற்றி தானே?

சம்பந்தமில்லாதது போல் தோன்றும் இந்த இரண்டு கதைகளையும் இணைத்திருக்கும் விதம், வெறும் அனுபவத்துக்கு அப்பாற்பட்ட திரைக் கல்லூரி போதனையை அரங்கேற்றுகிறது.

குத்துச் சண்டை வீரருக்குப் பொருத்தமாய்ப் பிரபுவைக் காட்டினும் ஒரு ஹெவி வெயிட் சாம்பியனைப் பிடிக்க முடியுமா? ஆரம்பத்தில் பேட்டை ரவுடியாய்ச் சின்னி ஜெயந்த், பாண்டு போன்ற உதவாத சகபாடிகளுடன் ஊருக்குள் கொட்டமடித்துக் கொண்டிருந்த பிரபு, சீதாவின் காதல் வலையில் சிக்கிய பிறகு என்னமாய் மாறிப் போகிறார்! அந்த மாற்றம் படு கன்வின்சிங். சீதாவின் பால்ய சிநேகிதி என்று சொல்லிக் கொண்டு அவர்கள் வீட்டோடு வந்து ஒட்டிக் கொள்ளும் நந்தினியிடம், மனைவி தாட்சண்யத்துக்காகப் பழக ஆரம்பித்து, அபாண்டப் பழி ஏற்றதும் அதிர்ந்து, மனைவியின் கடும் சொல் தாங்கமாட்டாமல் வெளியேறி, மகனுடன் பாசப் பிணைப்பில் உருகி ஒன்றித்து — இவற்றில் உள்ள குடும்பப்பாங்கின் முன்னால் அடுத்த பகுதியான அடிதடி சண்டை, வெறிக் கூத்து அமுங்கிப் போகிறது.

பாவம் சீதா, முக்கால் பகுதிக்கு மூக்கால் அழுது கண்ணீர் வடிப்பதும் அதிர்ச்சிக்கு ஆளாவதுமாகவே இருக்கிறார். அதில் அலுப்புத் தட்டாமல் ரொம்ப அழுத்தமாய் மனசுக்குள் இறங்குவது ஆச்சரியம். கணவனைப் பிரிந்து ஆசிரியையாய் இருப்பவரிடம் பெற்ற மகனையே மாணவனாய்க் கணவர் சேர்த்து அன்னியமாய் நடந்து கொள்ளும் போது.. அப்புறம் அந்த வாண்டுவும் அவர் காட்டும் தாய்ப் பாசத்தை நறுக்கி விட்டுக் கண்டுகொள்ளாமல் போகும் போது... ஐயோ, ஒரு தாயின் மனத் தவிப்பு எப்படி இருக்கும்! அதைக் குபுக்கென்று பிதுங்கும் விழி நீரில் இதழ்த் துடிப்பில் சீதா வெளியிட்டிருக்கும் விதம்—பரிவுக்குரியது.

பழைய மல்யுத்த தாராசிங்கையே அசல் வாத்தியாராக்கியிருப்பது அம்சமாய் இருக்கிறது.

இந்த நாலவரை வில்லாதி வில்லனாய்ப் போட்டுத் தொலைத்தாயிற்று என்பதற்காக அவர் உடம்பைச் சுற்றிப் பீப்பாய் மாதிரி ஏதோ ஒட்டு வேலை செய்திருப்பது அசிங்கம்.

தாளித்துக் கொட்டத் தமாஷ் பேர்வழிகளாய் யாரையும் காணோமே என்பது ஏதோ பழக்க வாசனையில் இப்போது தோன்றுகிறதே தவிர, இந்த மாதிரிப் படத்துக்குத் தேவையா என்றால் பக்கவாட்டில் தலையாட்டலாம் போலிருக்கிறது.

அதே மசாலாதான். ஆனால் குமட்டல் தராத ருசி.

— பி. எஸ். எஸ்.

# விண்வெளியில் காலனிகள்

20

சென்ற இதழில் சொன்ன ராம்ஸ்கூப் விண்கலம் ஒரு விஞ்ஞானக் கனவு என்றுதான் பலர் அபிப்பிராயப்படுகிறார்கள். அடுத்த நூற்றாண்டில் கூட இது சாத்தியமில்லை. எனவே, விண்வெளிப் பயணத்துக்குத் தலைமுறைக் கப்பல்களைத்தான் நாட வேண்டும். இதன் ஆதாரத் தத்துவம் 'எதற்கு நாம் அவசரப்பட வேண்டும்?' விண்வெளியை நம் வாழ்நாளில் அடைய முடியாது. எனவே, இப்போது ஆரம்பித்து வைக்கலாம். நமது பின் சந்ததியினர் யாராவது முடிக்கட்டுமே! பெரிசாகக் கப்பல் பண்ணி, அங்கே டீ. வி., வீடியோவிலிருந்து பருப்பு வரை எல்லா வசதிகளையும் பண்ணி, ஓர் ஆயிரம் வருடப் பயணத்திற்கு அனுப்புவது. அங்கேயே விவசாயம், இனவிருத்தி, காதல், சண்டை, கவிதை, எல்லாமே ஒரு மகத்தான பிக்னிக் போலச் செல்லட்டுமே! ஆயிரம் வருடங்களில் விண்வெளியின் வேற்றுக் கிரகங்களுக்குச் சென்று, அங்கு எங்கேனும் உயிர் வாழச் சாத்தியக்கூறு உள்ளதா என்று, கண்டுபிடித்து, இறங்கி 'டெண்ட்' போடலாமே.

இந்த வசீகரக் கருத்தும் அடுத்த நூற்றாண்டுக்குள் சாத்தியமா என்பது சந்தேகமே. இருந்தாலும் இந்த நூற்றாண்டில் பல சயன்ஸ் ஃபிக்ஷன்களில் விஞ்ஞானக் கதாசிரியர்கள் 'தலைமுறைக் கப்பல்களைப் பற்றி எழுதியுள்ளார்கள். ஹாரி மார்ட்டின்ஸன் என்னும் ஸ்வீடிஷ் நோபெல் பரிசுக் கவிஞர் 'அனியாரா' என்ற அழகான பெயர் கொண்ட நீண்ட கவிதையை இது பற்றி எழுதியுள்ளார். அதை ஒரு அப்பெரா (opera)வாக மாற்றி மேடையேற்றிப் பிரபலமாயிற்று.

அடுத்த நூற்றாண்டில் சாத்தியமாகக் கூடிய விண்வெளிக் காலனிகள் யாவை? 1970 வரை விண்வெளியில் இருக்கும் மற்ற நட்சத்திரக் குடும்பங்களைச் சார்ந்த மற்ற கிரகங்களில் நம்மைப் போன்ற உயிர்கள் இருக்கச் சாத்தியம் அதிகம் என்று எண்ணி வந்தார்கள். இப்போது விண்வெளியைத் தேடிப் போவதில் அர்த்தமில்லை என்று தீர்மானித்து விட்டார்கள். காரணம், நாம் கடைபரத்த இடம் இருக்குமா என்கிற சந்தேகமே. அப்படிச் சௌகரியமான கிரகம் ஏதாவது விண்வெளியில் இருப்பின், அதை வேற்று கிரக மனிதர்கள் விட்டு வைத்திருப்பார்கள் என்பது என்ன நிச்சயம்? நம் மனித குலம் மட்டும்தான் புத்திசாலிகளா? நம்மை விட புத்தியுள்ளவர்கள் இருக்க மாட்டார்கள் என்று என்ன உத்தரவாதம்? அப்படியிருந்தால் விண்வெளியில் உள்ள அத்தனை நல்ல இடங்களையும் அவர்கள் ஆக்கிரமித்திருப்பார்களே! எதற்காக விரயமாக மன்றாடிக் கொண்டு ஆயிரம் வருஷப் பயணம்! இவ்வாறு சிலர் சிந்தித்து, 'இருக்குமிடமே சொர்க்கம். நம்மைச் சுற்றியுள்ள லோக்கல் விண்வெளியே போதும்...' என்று சொல்கிறார்கள்.

வேற்று கிரகத்தில் புத்திசாலிகள் இருந்தால் அவர்கள் நம் பூமிக்கு ஏன் இன்னும் வரவில்லை. நம் பால்வீதி காலக்ஸியின் வயது ஆயிரம் கோடி வருஷம். இத்தனை வருஷத்தில் ஏதாவது ஒரு புத்திசாலி பூமிக்கு வந்து இறங்கி இருக்க மாட்டானா? ஃப்ராங் டிப்ளர் (Frank Tipler) என்கிற கணித விஞ்ஞானி வான் நாய்மன் ப்ரோப் (Von Neumann Probe) என்பது பற்றி சொல்லியிருக்கிறார். தன்னைத்தானே சிருஷ்டித்துக் கொள்ளக் கூடிய விண்வெளி வேவு இயந்திரங்கள்.. அங்கங்கே கிரகத்தில் இறங்கி... மண்ணைப் பரிசோதித்துப் பார்த்துத் தனக்கேற்ற உலோகங்கள் எங்கே கிடைக்கின்றன என்று கண்டுபிடித்து, உருக்கி, தீட்டி, மடக்கி தன்னைப் போல் மற்றொரு இயந்திரத்தை உருவாக்கி, அதை அடுத்த பயணத்துக்கு அனுப்பும் புத்திசாலி இயந்திரங்களை அந்த உயிரினங்கள் தயாரிக்கும் சாத்தியக்கூறு உள்ளது. அவ்வாறு அனுப்பிய இயந்திரங்கள் தத்தித் தத்தி மெதுவாக வந்தாலே நம் பூமிக்கு வந்து சேர 30 கோடி வருஷங்கள்தான் ஆகும். நம் காலக்ஸியின் வயசில் மூன்று சதவிகிதம். வந்திருக்க வேண்டும். எங்கே அவர்கள்?

சுஜாதா

'எங்கே அவர்கள்' என்று விஞ்ஞானிகள் அமெரிக்காவில் மேரி லண்டில் ஒரு கருத்தரங்கம் நடத்தினார்கள். விண்வெளியில் நம்மைத் தவிர, வேறு அறிவு இருந்தால் இந்நேரம் அவர்கள் நம்மைத் தொடர்பு கொண்டிருக்க வேண்டும் என்கிற முடிவுக்கு வந்தார்கள். பறக்கும் தட்டு ஆசாமிகள் இடையே கொஞ்சம் 'வந்து விட்டார்கள்' என்று கத்திப் பார்த்தார்கள். இதுநாள் வரை பறக்கும் தட்டு ஒரு கேஸ் கூட நிரூபிக்கப்படவில்லை.

நம் காலக்ஸியில் நாம் ஒருவர்தாம் உயிருள்ளவர்கள் என்கிற கூற்றுத்தான் தற்போது பிரபலமாக நம்பப்படுகிறது. பால்வீதியில் நாம் மிகத் தனியான பிரயாணிகள்! மற்ற விண்வெளியின் பல கோடி நூறாயிரம் ஒளி வருஷங்களும் விரயம். காலி! கிரகங்களில் ஒரு ஈ, காக்காய் கிடையாது. அனைத்தும் பரம வேஸ்ட் என்றுதான் தோன்றுகிறது. 'ரயில்வே ஸ்டேஷன், பஸ் ஸ்டாண்டு மிக சமீபம்; கல்கண்டு போலத் தண்ணீர் என்று விளம்பரம் கொடுத்து விட்டு மனைகளாகப் பிரித்துச் சிலர் விற்கத் துவங்கலாம்.

நிற்க. அமெரிக்க ப்ரின்ஸ்டன் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த ஜெரார்டு ஓ நீல் ஒரு புது மாதிரியான கருத்தைச் சொன்னார். 'விண்வெளிக் கப்பல் எதற்காக ஓர் இலக்கு நோக்கிச் செல்ல வேண்டும்? சும்மா விண்வெளியில் மிதந்து சென்று கொண்டே இருக்கட்டுமே. குறிக்கோள் எதற்கு?' என்றார். விண்வெளிப் பயணம் என்பதே சாதனை! ஒரு சவால். ஓ நீல் தம்முடைய 'மேல் எல்லை' (The High Frontier) என்கிற புத்தகத்தில் சொன்ன விஷயங்கள் மிகப் பிரசித்தமாயின.

நம் பூமியில் அடிதடி ஜாஸ்தி. இடப்பற்றாக் குறை. அலுத்துப் போச்சு. விண்வெளியில் அக்கடா என்று நிறைய இடம் இருக்கிறது. என்ன புதுசாகக் குறைந்த செலவில் சக்தி சேகரிக்க வழி கண்டுபிடிக்க வேண்டும்; இருக்கவே இருக்கிறது சூரியன்!

'செவ்வாய், சுக்கிரன் போன்ற கிரகங்களில் எல்லாம் காலனி அமைப்பதில் அர்த்தமில்லை' என்கிறார் ஓ நீல். அங்கே உயிர் வாழ ஸ்தாபன அமைப்புக்களுக்கு மிகுந்த செலவாகும். 'டெர்ரா ஃபார்மிங்' என்று ஒரு சங்கதி உண்டு. (அதைப் பற்றிப் பிறகு)

விண்வெளிக் காலனிகளை எங்கே அமைக்க? பூமியை விட்டு வெகு தூரத்தில் சூன்யத்தில் சுற்றும்படி அமைக்கலாம். அல்லது 'லெக்ரான்ஜ்' (Legrange) மையங்கள் என்று ஐந்து இடங்கள் இருக்கின்றன. இங்கே சூரியன், சந்திரன், பூமி இவை மூன்றின் ஈர்ப்பு விசைகள் சமனமாகி விடுகின்றன. ஒரு சுதந்திரத் திட்டு. இங்கே விண்வெளிக் காலனி அமைப்பதில் பல சௌகரியங்கள் உண்டு. 24 மணி நேரமும் பகல். எப்போதும் சூரியன்.

இம்மாதிரி காலனி ஒன்றில் இனி வாழ்க்கை எப்படி இருக்கும் என்று அடுத்த வாரம் வரை யோசித்துப் பாருங்கள்.

அதற்கு முன்: இந்தக் குறுக்கெழுத்துப் போட்டிக்கு விடை பண்ணிப் பாருங்கள்.




இடம் வலம்

1. கணிப் பொறி
2. அனைத்து இணைப்புக்களும் இதில்
3. இந்த வாரம் வந்த 'ப்ரோப்' விஞ்ஞானி

மேல் கீழ்

1. 'ஸ்டோரி போர்டு' நடிகர்
2. அபரிமித தனிமம்.

('ஓர் ஒளி வருடத்துக்கு எத்தனை செகண்டுகள்?' என்ற சென்ற வாரக் கேள்விக்கான விடை: ஒளி வருஷம் என்பது தூர அளவு. கால அளவல்ல.)

(தொடரும்)

"வர வர எதுக்கு விடியோ எடுக்கிறதுன்னு ஒரு விவஸ்தை இல்லாம போச்சு!"

"என்ன சொல்றீங்க?"

"பக்கத்து வீட்ல மாமியார் — மருமகள் சண்டையை விடியோவிலே எடுக்கிறாங்க!"

— எஸ். முகம்மது யூசுப்.



## வட்டமேஜை

# தெற்கைப் போல் ஜோக்குகள்; வடக்கைப் போல் துணுக்குகள்!

* இளம் சிறுவர்களைச் சீரழிப் பதில் இன்றைய அரசும், கல்வித் துறையும் முக்கிய பங்கு வகித்து வருகிறது என்பதற்குக் 'கரும்பல கைத் திட்டத்தில் கண்டமேனிக் குத் தில்லு முல்லு' என்ற கட்டு ரையே மிகச் சிறந்த உதாரணம்.

பழனி — 1. ஆர். சரவணன்.

* புதிய பிரதமராக வி. பி. சிங் தேர்ந்தெடுக்கப்பட்ட நேரத்தில் நடந்து முடிந்த சில சுசப்பான சம்பவங்களைத் தனக்கே உரிய தனித் தன்மையுடன் சுட்டிக் காட்டி, வி. பி. சிங்குக்கு வாழ்த் துத் தெரிவித்த கல்கியின் பாணி நடுநிலையின் உதாரணம்.

கொணவட்டம், கே. ஆர். தேவேந்திரன்.

* 'இணையற்ற கேப்டன் இம்ரான்கான்' எனும் அட்டைப் படக் க ட் டு ரை கிரிக் கெட் இரசிகர்களுக்கு விருந் தாக இருந்தது. அத்தோடு பாரத கிரிக்கெட் போர்டுக்கு ஒரு வழி காட்டியாகவும் உள்ளது.

இலால்பேட்டை, எஃப். ரியாஜ் அஹமது.

* இம்ரான்கானைப் பற்றிய கட்டுரையில் 'கபில்தேவ் தலை மையில் பாகிஸ்தான் கிரிக்கெட் அணியை இந்திய அணி தோற் கடித்து, ப்ருடென்ஷியல் கோப் பையைப் பெற்றதைக் கிரிக்கெட் ரசிகர்கள் இன்றும் சொல்லி மகிழ்கிறார்கள்' என்ற செய்தி சரியல்ல. 1983 ஆம் ஆண்டு இங்கிலாந்தில் நடைபெற்ற உலகக் கோப்பை இறுதி ஆட்டத்தில் கபில்தேவ் தலைமையில் இந்திய அணி, மேற்கிந்தியத் தீவுகள் அணியை வென்று ப்ருடென்ஷி யல் கோப்பையைப் பெற்றது. 1985 ஆம் ஆண்டு ஆஸ்திரேலி யாவில் நடைபெற்ற இறுதி ஆட்டத்தில் காவஸ்கரின் தலை மையில் இந்திய அணி, பாகிஸ் தான் அணியைத் தோற்கடித்து 'பென்ஸன் அண்ட் ஹெட்ஜஸ்' (Benson and Hedges) வொர்ல்ட் சீரிஸ் கோப்பையைப் பெற்றது என்பதே சரி.

திருச்சி — 6, கே. என். குமார்.

(தவறைச் சுட்டிக் காட்டி யுள்ள பல வாசகர்களுக்கும் நன்றி. — ஆ'ர்.)

* ராஜீவின் தன்னிச்சையான போக்கைச் சகித்துக்கொண்டுள்ள காங்கிரசின் சரிவைப் பற்றியும், ஆட்சியைப் பிடித்துள்ள தேசிய முன்னணிக்கு உள்ள தலையாய கடமைகள் பற்றியும் தலையங்கம் இடித்துக் கூறியுள்ளதை வரவேற் கிறேன். மேலும் இ. காங்கிரஸ், அ.தி.மு.க., தி.மு.க. ஆகிய கட்சி களுக்குத் தேவை அடக்கம், கர்வ மின்மை, ஆணவமின்மை என்று கூறியுள்ளது "திருவாசகம்" ஆகும்.

பொகலூர், அ. இராஜப்பன்.

* 'தேர்தல் கற்பிக்கும் பாடங் கள்' என்ற தலையங்கத்தை அவசி யம் படிக்க வேண்டியவர்களில் மிக முக்கியமான ஒருவர்: ஜெயலலிதா!

மங்கைநல்லூர், ஆர். செல்வ ராணி.

* மெஜாரிடி கிடைக்காது போனாலும் உள்ளதற்குள் அதிக பட்ச இடங்களைக் காங்கிரஸே பெற்றுள்ளது. ஆனபோதிலும் ஆட்சியைக் கைப்பற்ற மலிவான தந்திரங்கள் எவற்றையும் கையா ளாமல், மக்கள் தீர்ப்புக்கு மதிப் பளித்து, "காங்கிரஸ் எதிர்க்கட்சி வரிசையில் அமரும்," என்று அறிவித்து காங்கிரஸுக்கு வாக் களிக்காத மக்களின் நன்மதிப்பி லும் ராஜீவ் பெருமளவு உயர்ந்து விட்டார். இதைத் தலையங்கத்தில் நீங்கள் பாராட்டியிருக்கலாமே!

சென்னை — 44, வி. முரளி.

* கொண்ட லட்சியத்துக்காகத் தேவையானால் அரசியல் கருத்து மாறுபாடு கொண்ட வாசகர்களை




இழக்கவும் தயார் என்று ஒரு தலையங்கத்தில் கூறியிருந்தீர்கள். இம்ரான்கான் பற்றிய கட்டுரை, பிரசவம் பற்றிய மருத்துவக் கட் டுரை, பேட்டிகள் தரமான சினிமா விமரிசனங்கள் அமரர் கல்கியின் அற்புதமான 'பொன்னியின் செல் வன்' அடங்கிய கல்கியை அரசி யல் மாறுபாடு காரணமாக நாங் கள் ஒருபோதும் இழக்கத் தயாரில்லை!'

விழுப்புரம், கே. எஸ். குமார்.

* மத்தியில் ஆளும் கட்சிக்குத் தென்னகத்தில் உள்ள நாடாளு மன்ற உறுப்பினர்களைப் போல, இவ்வாரக் கல்கியில் மூன்று ஜோக்ஸ் மட்டுமே இருந்தது. வட மாநிலங்களில் அதன் பலம் போல ஒரே துணுக்கு ம ழை யா க இருந்தது!

குடியாத்தம் — 1. ஏ. உமாசங்கர்.

* பெண்கள் மட்டுமல்ல, ஒவ் வோர் ஆணும் நிச்சயம் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம், 'சுகப் பிரசவத்திற்குச் சில யோசனைகள்' என்ற கட்டுரை.

தக்கோலம், ஆ. புகாரி.

* 'மீன்கள்' சிறுகதை, யதார்த்த நிலையினைப் படம் பிடித்துக் காட்டுவதாய் அமைந்திருந்தது. ஒவ்வோர் அதிகாரியும் கணபதி யைப் போல் அரசியல்வாதிகளுக் குப் பயப்படாமல், தைரியமுடன் நடந்து கொண்டால் எப்படியிருக் கும்! ஹூம்...! பெருமூச்சுத்தான் வருகிறது!

மதுரை — 1, பிரபாகர் ப்ரியன்.

* பார்கவியின் 'காத்தவராயன்' படிக்க சுவாரஸ்யமாகவும், நகைச் சுவையாகவும் அதே சமயம், பக்தி யின் இழையோட்டத்தையும் கொண்டிருந்தது.

ஆலங்காடு, பா. சிவசங்கர்.

* "தேர்தல் டியூட்டியால் வாக் குரிமை போச்சு" — துணுக்குச் செய்தி படித்தேன். தேர்தல் பணி யில் ஈடுபடும் அலுவலர்கள் மற்றும் காவல் துறையினருக்கு, வாக்குரிமையைப் பயன்படுத்தச் சட்டப்படி வசதி உள்ளது. ஆனால், வருத்தத்திற்குரிய உண்மை என்னவென்றால், இவர் களுக்கு உரிய காலத்தில் Election duty certificate களும் தபால் வாக்குச் சீட்டுகளும் வழங்கப்படு வதில்லை. இதனால் அவர்களு டைய வாக்குரிமை பறிக்கப்படு கிறது. இவ் விஷயத்தில் அதிகாரி கள் மெத்தனமாக நடந்து கொள் வது கண்டிக்கத்தக்கது.

மன்னார்குடி. எஸ். ராஜேந்திரன்.

# வரப் போகிறவளிடம் ஒரு கேள்வி...

சிவராமனின் அப்பா பத்துத் தரமாவது கேட்டிருப்பார், ''கௌம்பலாமா, கௌம்பலாமா?'' என்று.

சிவராமனும் சரியென்று சொல்லிக் கொண்டேதான் உட்கார்ந்திருந்தான். அவன் அம்மாவும் பழைய பட்டுப் புடைவைகளில் நல்லதாய் எடுத்து உடுத்திக் கொண்டு தயாராகியிருந்தாள். நேற்றே பக்கத்து வீட்டு விசாலாட்சியிடம் இரவல் வாங்கியிருந்த நகை, கழுத்தில் மின்னிக் கொண்டிருந்தது. அம்மா சந்தோஷமாயிருக்கிற மாதிரி பட்டது சிவராமனுக்கு. மருமகள் வந்து விட்டால் நிரந்தர சந்தோஷம்தான். அம்மாவின் அதிகார எல்லையைப் பரப்ப விஸ்தீரணம் கிட்டும். அவளின் ராஜ்ய பரிபாலனம் சிவராமனுக்கு மனத்தில் வந்தது.

அம்மா அவன் முன் வந்து நின்றாள். புடைவையைச் சரிசெய்து கொண்டாள். கண்ணாடியைப் பார்த்து நகையைக் நடுக் கழுத்தில் இருக்கச் செய்தாள். ''கல்யாண முன்னு வந்துட்டா எனக்கு ரெண்டு பவுன் நகை வாங்கிப் போடாமே விட்டுருவியா சிவராமா?'' என்றாள்.

''பாக்கலாம்மா...''

''என்ன பாக்கலாம்.. பண்ணிப் போடணும்...''

''அதுக்குத்தான் வர்ற மருமகள் வேலை பார்க்கற பொண்ணா இருக்கணும்ன்னு சிவராமன் சொல்றான். இன்னொரு சம்பாத்யம்!''

''நான் உங்களுக்கு நகை பண்ணிப் போட வேலை பாக்கற பொண்ணைத் தேடலையப்பா.'' என்றான் சிவராமன் வெடுக்கென்று.

''இந்த வயசில என்ன நகை போடணமுன்னு ஆசை...'' அவன் அப்பா சிரித்துக் கொண்டார்.

''சும்மாதான். பையனுக்குக் கல்யாணமானதும் எனக்குச் சந்தோஷமாயிருக்க!''

அவன் அம்மாவும், ''கௌம்படா கௌம்படா'' என்று நாலைந்து முறை சொல்லி விட்டாள். அவனும் ''சரி சரி'' என்றபடி உட்கார்ந்தே இருந்தான்.

அவன் அப்பா அருகில் வந்தார். மெல்ல தோளைத் தொட்டார். அவன் திரும்பினான். ''என்னாச்சு சிவராமா... கௌம்பலியா... நாங்க ரெண்டு பேரும் கண்டதையெல்லாம் பேசினதால மனசு கீறிடுச்சா? எல்லாம் தமாசுக்கு... ரிட்டயர்ட் லைப்லே இப்படி பேசிக் கூட நாளாச்சு தெரியுமா?''

சிவராமனுக்குத் திக்கென்றது. இதெல்லாம் எதுவுமில்லை என்று சொல்ல ஆசைப்பட்டான். இவர்களைத் தான் ஏன் கஷ்டப்படுத்த வேண்டும் என்றிருந்தது. காரணமில்லாமல் காயப்படுத்தி விட்டோமா என்ற நினைப்பும் வந்தது.

''இல்லப்பா கௌம்பிடறேன் சீக்கிரம்...''

''பொண்ணுப் பார்க்கப் போறானோ, இல்லே இண்டர்வியூவுக்குப் போறானோ... பயந்து சாகறான் போலிருக்கு. பயமும், டென்சனும் மொதப் பொண்ணு பாக்கறப்போ காணோம். ரெண்டாம் பொண்ணுக்கு வந்துடுச்சாக்கும்....'' — அப்பாவிற்கு மறுபடியும் சிரிப்பு வந்து விட்டது. சந்தோஷமாய் இருந்தது சிவராமனுக்கு.

''இண்டர்வியூவே பரவாயில்லைன்னு தோணுதப்பா...''

அவன் சொன்னதைக் கேட்டு யோசிப்பவர் போல் அவனையே பார்த்துக் கொண்டிருந்தார்.

வீட்டை விட்டு வெளியில் வந்தார்கள். சிவராமன் வானத்தைப் பார்த்தான். வானம் வெளிறியிருந்தது. வானத்தின் வெளிர் நீலம் எங்கும் வியாபித்திருப்பதைப் போலிருந்தது.

முதல் பெண்ணைப் பார்க்கப் போனபோது அவனுள் நிறையக் கற்பனை இருந்தது. வானம் கூடத் தன் பரபரப்பைக் கலைந்து கலைந்து காட்டிக் கொண்டிருப்பதாகப் பட்டது. பெண் பார்க்கப் போகும் நேரத்தை இளம் காலை நேரமாகத் தேர்ந்தெடுத்தான். 'ஆபீசுக்கு எதுக்கு லீவு போடணும்? பொண்ணுப் பார்த்த கையோட ஆபீசுக்கு போயிடறேன்' என்றான். தனக்கு மிகப் பிடித்த பிரவுன் கலர் பேண்ட்டையும், அழுத்தமான மஞ்சள் கலர் சட்டையையும் தேர்ந்தெடுத்துக் கொண்டான். 'இந்த டிரஸ் பல விஷயங்களிலே ராசியா இருந்திருக்கு. இந்த வேலைக்கான இண்டர்வியூவப்ப இதுதான். அப்புறம் அப்பாயின்ட்மெண்ட் தினத்திலே கூட!' அங்கே எப்படியெப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று அப்பாவிடமும், அம்மாவிடமும் சொன்னான். அவர்களும் சரியென்றனர். 'பொண்ணு

சுப்ரபாரதிமணியன்

புடிச்சிருக்கான்னு மட்டும் பார்க்கலாம். அவ்வளவுதான். அப்புறம் இன்னொரு நாளைக்கு மீதியெல்லாம். பாட்டு பாடத் தெரியுமா, சமைக்கத் தெரியுமான்னு எதுவும் கேட்க வேண்டாம்!'

அவன் கனவில் ராஜகுமாரிகளைத் தேடி அலுத்திருந்தான். ராஜகுமாரிகள் ராஜகுமாரிகளாகவே இருந்தார்கள். அவன் மட்டும் சாதாரணனாக இருந்தான். சாதாரணனாக இருந்து கொண்டு எதற்கு ராஜகுமாரிகளைப் பற்றி நினைக்க வேண்டும் என்ற எண்ணமும் வந்தது.

அப்பெண்ணைச் சிவராமனுக்கு ரொம்பவும் பிடித்துவிட்டது. ராஜகுமாரியாக இல்லாவிட்டாலும் தனக்குத் தோழமையாக இருப்பாள் என்று நினைத்தான். அம்மாவும், அப்பாவும் மேற்கொண்டு எதுவும் பேசவில்லை. சந்தோஷமாய் விடைபெற்றார்கள்.

அன்றைக்கு முழுக்கச் சிவராமன் கனவுகளுள் இருந்தான். வாழ்க்கை ஓர் அற்புதப் பரிசுதான் என்று நினைத்தான். பூரிப்படைந்தான். அந்தப் பெண்ணின் அலுவலக போன் நெம்பரை எப்படியாயினும் தெரிந்து கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டான். கூச்சமாயிருந்தது. என்றாலும் ஒரு தினம் விட்டு அவளுக்குப்போன் செய்வது என்றும் முடிவு செய்திருந்தான்.

அவன் நினைத்திருந்த அன்றைக்கு, அப்பெண்ணே சிவராமனைத் தேடி அவனின் அலுவலகம் வந்தாள். ரொம்பவும் சந்தோஷமாயிருந்தது அவனுக்கு. தன் அலுவலக நண்பர்களையெல்லாம் அழைத்து அறிமுகப்படுத்த எண்ணினான். அவளிடமும் சொன்னான். 'அவசியமில்லை' என்று அவள் சொன்னதும் முகம் கறுத்தது. வெளியில் போகலாம் என்று கூட்டிப் போனான்.

அவளின் கனவுகளைக் கலைத்தாள். தான் ஒருவரைக் காதலிப்பதாகவும், அவரையே திருமணம் செய்து கொள்ளப் பெற்றோர்களைச் சமாதானப்படுத்த வேண்டும் என்றும் சொன்னாள். சிவராமன் பெண் பார்க்க வந்ததை மறுக்க முடியாமற் போனது. அவளின் பெற்றோர்களின் வார்த்தைகளை மீற முடியாமல் என்றாள். பெண் பிடிக்கவில்லை என்று ஒரு கடிதம் எழுதிவிடும்படி சொன்னாள். சரியென்றான்.

அப்பாவுக்குத் தெரியாமல் அப்பெண்ணின் பெற்றோருக்குக் கடிதம் எழுதினான். சிவராமனின் அப்பா மெதுவாய், 'அந்தப் பொண்ணு உனக்கு நிச்சயம் புடிச்சிருக்கும். மேற்கொண்டு பேசட்டுமா?' என்று கேட்டபோது, 'பொண்ணு எனக்குப் பிடிக்கலேன்னு லெட்டர் போட்டு ரொம்ப நாளாச்சுப்பா...' என்றான். அவர் திகைத்தார். எரிச்சலாய் வார்த்தைகளைக் கொட்டிய போது, 'விசாரிச்சுத்தான் பிடிக்கலேன்னு எழுதினேன்' என்றான். அவரும் யோசித்திருக்க வேண்டும். 'உன் இஷ்டம் எப்படியோ அப்படி...' என்று விலகிக் கொண்டார்.

அப்புறம் 'பெண் பார்க்கப் போகலாம், அங்கே பெண் இருக்கு... வேலை செய்யற பொண்ணுதான்...' என்றெல்லாம் சொன்ன பலமுறை, 'நீங்களே பாருங்க. சரின்னு பட்டாக் கடைசியா நான் வந்து பார்க்கிறேன்...' என்று சொல்லியிருந்தான்.

''இந்தப் பொண்ணாச்சும் உனக்குப் பிடிக்கணும்'' என்றார் அப்பா.

''எனக்குப் பிடிக்கிறது வேறு. சம்மதம் வேறுதானே...''



''ஆமாம். ஆமாம்.வேலைக்குப் போற பொண்ணுதான் வேணுமா?''

''வேலைக்கும் போகணும்; நமக்கும் சம்மதம் ஆகணும்...''

''இல்லை... போன தரம் எனக்கும், உங்கம்மாவுக்கும் பிடிச்சிருந்தது. உனக்கும் பிடிச்ச மாதிரிதான் தோணிச்சு. அப்புறம் உன் மனசு ஏனோ மாறிடுச்சு...''

அவன் எதுவும் சொல்லவில்லை. வீணாய் எதற்காகச் சொல்லிக் கொண்டு என்று மனத்தில் பட்டது. அப்பாவிற்குச் சொல்ல, மெல்லப் பரவிவிடும். அம்மா சம்பந்தமில்லாமல் அலறுவாள். 'அந்தச் சம்பந்தத்திலிருந்து தப்பிச்சோம்... கடவுள் கிருபை' என்பாள். தான் வேண்டிக் கொண்ட எல்லாத் தெய்வங்களையும் வாழ்த்தி நன்றி சொல்வாள். சொல்லவில்லை அவன்.

இந்தப் பெண்ணைப் பார்த்தபின் தனிமையில் அவளை அழைத்துப் பேசும் சந்தர்ப்பம் அமைத்துக் கொள்ள வேண்டும். பத்து நிமிஷமோ, ஐந்து நிமிஷமோ, என்று நினைத்தான்.

பெண் அவன்முன் வந்து நின்று காப்பித் தட்டை ஏந்தினாள். ஒரு நிமிஷம் அவன் வாங்குவான் என்று எதிர்பார்த்தாளோ என்னவோ, கீழே வைத்தாள். எல்லோரின் பார்வையும் அவள் மேல் நிலைத்திருந்தது. அவனும் ஏறிட்டுப் பார்த்தான். நல்ல அழகு என்று பட்டது. அல்லது பிரமையா என்றிருந்தது. பெண் ஒரு நிமிடம் நின்றிருந்து விட்டு நகர்ந்து விட்டாள். வீட்டிலிருந்து கிளம்பியபோதிருந்த சோர்வு, பெண்ணின் முகம் பார்த்ததும் நழுவிவிட்டது போலிருந்தது. அதுகுறித்து அவனுக்கே ஆறுதலாய் இருந்தது. அவனுக்குப் பக்கத்தில் பெண்ணின் அண்ணன் உட்கார்ந்திருந்தார். எதிரில் அவளின் அப்பாவும், அறையின் மூலையில் அவள் அம்மாவும்.

காப்பியைச் சுவைத்துக் குடித்தபின் நிமிர்ந்தான். பக்கத்திலிருந்த பெண்ணின் அண்ணன் பக்கம் திரும்பினான்: ''உங்க சிஸ்டருக்குப் பாடத் தெரியுமா?''

அவர் சடாரெனச் சுதாரித்துக் கொண்டவர் மாதிரி பார்த்தார்.

''தெரியாது...''

''தெரியாதா ...?''

எல்லோரும் திகைப்புடன் சிவராமனைப் பார்த்தார்கள். சிவராமனின் அப்பா என்ன இதெல்லாம் புதுசாய் என்பது போலப் பார்த்தார். போன முறை பெண் பார்க்கப் போன போது இதெல்லாம் எதுவும் கேட்கக் கூடாது என்று சொல்லியிருந்தானே!

''பாட்டுத் தெரிஞ்சுதான் ஆகணுமுன்னு ஒண்ணுமில்லே... அவசியமில்லே பாருங்க...'' அவனே சொன்னான்.

அவனின் பதிலில் எல்லோரும் ஆறுதல் அடைந்தது போல் தெளிந்து உட்கார்ந்தார்கள்.

''சமையல்?''

''அதுக்கென்ன...? நல்லாச் சமைப்பா... ஆபீஸ் போயிட்டு வந்துட்டுப் பொழுது போக்கறது சமையல் ரூம்லதான்.'' பெண்ணின் அம்மா பரபரவென்று சொன்னாள்.

கொஞ்ச நேரம் மௌனம் நிலவியது.

''பொண்ணோட நான் தனியாப் பேசலாமா?''

பல்லைக் கடித்துக் கொண்டு சிவராமனின் அப்பா அவனைப் பார்த்தார்.

பெண்ணின் தந்தை, ''அதுக்கென்ன... இந்தக் காலம் புதுசு. வெளி உலகம் பெரிசு. பேசுங்க...'' என்றபடி வழிவிடுபவர் போல, எழுந்து, முன் ஹாலுக்குச் சென்றார்.

சிவராமனின் அம்மாவும், அப்பாவும், மற்றவர்களும் மறைந்தார்கள். பெண்ணைக் கூட்டி வந்து சேரில் உட்காரச் சொல்லி விட்டு, அவள் அம்மாவும் சமையலறைக்குள் புகுந்து வெளியிடம் போனாள்.

பெண்ணை நிமிர்ந்து பார்த்தான் சிவராமன். அழகாயிருந்தாள். ஆபீஸ் பக்கத்து ஸீட் பரிமளா போல இருந்தாள். 'பரிமளா போல நீயிருக்கே...' என்று சொல்லலாமா என நினைத்தான்.

தலையைக் குனிந்து கொண்டிருந்தவள் நிமிர்ந்தாள். ''சொல்லுங்க'' என்றாள்.

அவன் அவளைக் கூர்ந்து பார்த்துக் கொண்டே கேட்டான்:

''நீங்க யாரையாவது காதலிக்கிறீங்களா? உங்க காதலுக்கு இடைஞ்சலா நான் இந்தச் சம்பிரதாயத்தில வந்துட்டேனா... சொல்லுங்க...?''

முதலில் அதிர்ந்தாள். பிறகு அவன் எங்கோ – யாரிடமோ காயப்பட்டிருக்கிறான் என்பது அவளுக்குச் சட்டெனப் புரிந்து போக, அவனை ஆறுதலாகப் பார்த்தாள்.

---

## மதிப்புக்குரிய பெண்மணி

உங்களுக்கு நன்கு தெரிந்த, ஆனால் உலகுக்குத் தெரியவராத ஒரு பெண்ணைப் பற்றி, ''மதிப்புக்குரிய பெண்மணி'' என்று தலைப்புத் தந்து எழுதுங்கள். உறவினர், நண்பர், உடன் வேலை பார்ப்பவர், தெருவில் காய்கறி விற்றோ, வீட்டு வேலை செய்தோ பிழைப்பவர் என்று யாராக வேணுமானாலும் இருக்கலாம். உங்கள் மதிப்பில் அவர் உயரக் காரணம் என்ன? தபால் கார்டில் மட்டுமே விவரிக்கலாம்! பிரசுரமானால் பரிசு ரூ. 25/–.



**முடிவு தேதி: டிசம்பர் 29, 1989.**

# தயிர் சரியாக உறையா விட்டால் பால் மீது குறை கூறுவீர்களா

நான் மாட்டேன்

அநேக இல்லத்தரசிகள், தயிர் சரியாக உறையாவிட்டால் பாலின் மீது குறை கூறுவார்கள். ஒரே சீராக இல்லையென்றோ, தரத்தைப் பற்றியோ குறை கூறுவார்கள். எப்போதும் பால் ஒரு சீராக இருப்பதற்கும், சிறந்த தரத்துடன் இருக்கவும் தினமும் அமுல் மில்க் பவுடர் உபயோகியுங்கள்.

அமுல் மில்க் பவுடர் கொண்டு நீங்கள் தூய்மையான ஆடை நிறைந்த பாலை நொடியில் தயாரித்து விடலாம். அப்படியே அருந்தலாம். தேனீர், காப்பி, தயிர், மோர், பாயசம், கஸ்டர்ட், கேக், ரஸகுல்லா... எது வேண்டுமோ தயாரிக்கலாம்.

Amul MILK POWDER

RADEUS/AMP/3-88-TAM

## அமுல் மில்க் பவுடர்

**வீட்டினுள் இயங்கும் ஒரு பால்பண்ணை.**

OPERATION FLOOD

விற்பனைக்கு விடுப்போர் : குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெடிங் ஃபெடரேஷன் லிட்., ஆனந்த் 388 001



# இல்லமை தாராயோ?

## ௧

**வ**ந்தனாவுக்கு ஒரே வாரத்தில் தன் புதிய அலுவலகம்மிகவும்பிடித்துப்போனது. மேல் தட்டு வர்க்கத்தின் குடியிருப்புக்கள் சூழ்ந்த பெஸண்ட் நகரில், அந்தத் தெருவில் இந்த ஓர் அலுவலகம் மட்டுமே. அதுவும் இரண்டாவது மாடியில். சதா சீறும் கடற்கரைக் காற்று மின் விசிறிகளைக் கிண்டல் செய்தது.

நாற்பத்தைந்து பேர்களில் இவளையும் சேர்த்துப் பதின்மூன்று பெண்கள். இரண்டு பேரைத் தவிர, மற்றெல்லோரும் திருமணமாகாதவர்களாய் இருந்ததில், ஒரு கல்லூரி வகுப்பறையின் சூழ்நிலையை உணர்ந்தாள். அந்தப் பெண்களுடன் மிகச் சுலபமாகக் கலந்துவிட முடிந்தது.

இரண்டு தினங்களுக்குச் சைக்கிளில் வந்து போனதில், இடுப்பும் தொடைகளும் அயர்ச்சி கொடுக்க, மரியாதையாக பஸ்ஸில் வர ஆரம்பித்தாள். நான்கே தினங்களில் தன் மேஜையின் வேலைகள் புரிபட்டு விட்டன. நிறுவனத்தின் வரலாற்றை, மெனக்கெட்டு ஆண்டு மலர்களில் பொறுமையாகப் படித்ததில், அரவிந்த் பொறுப்பேற்ற பிறகு சூப்பர் வேகத்தில் கம்பெனி வளர்ந்திருப்பதன் புள்ளி விவரங்கள் புருவமுயர்த்த வைத்தன. இத்தனை திறமையா? எம். பி. ஏ. கூடக் கிடையாது.

தவிர, சக ஊழியர்களில் யாரும் நிர்வாகத்தைப் பற்றியோ, முதலாளியைப் பற்றியோ குறையாக ஒரு வார்த்தை கூட முணுமுணுக்காதது ஓர் ஆச்சரியமான விஷயமாகத்தான் இருந்தது. மாறாகப் புகழவே செய்தார்கள்.

''ஹி ஈஸ் எ ஜெண்டில்மேன்,'' என்றாள் கோகிலா.

''எட்டு ஆபீஸ்ல வேலை பார்த்திருக்கேன். இப்படி ஒரு முதலாளியை நான் பார்த்ததில்லை,'' என்றாள் பிரியதர்சினி.

''முகம் லேசா வாடினாப்பல இருந்துடக் கூடாதும்மா. ஏன், என்னன்னு விசாரிச்சி, உடம்பு சரியில்லைன்னா லீவ் எடுத்துக்கிட்டுப் போகச் சொல்லிடுவாரு. பணப் பிரச்னைன்னா அட்வான்ஸா வாங்கிக்கச் சொல்லி ஏற்பாடு செஞ்சிடுவாரு. வீட்ல போட்டோ மாட்டி வச்சிருக்கேம்மா. கும்புட்டுட்டுத்தான் வீட்டை விட்டுப் புறப்படுவேன்,'' என்றான் ப்யூன்.

''அதே சமயம் வேலைல ரொம்ப ஸ்ட்ரிக்ட். கோபம் வந்தால் அவர் நடந்துக்கிற விதம் கொஞ்சம் வினோதமா இருக்கும். சில மாமியார்கள் மருமகள்களோட உரசல் வர்றப்போ, மாஞ்சி மாஞ்சி எல்லா வேலைகளையும் அவங்களே செய்வாங்க தெரியுமா? அது மாதிரி ஒரு ஸ்டேட்மெண்ட் எடுத்ததில தப்பு இருந்துச்சின்னா அவரே உட்கார்ந்து எடுக்க ஆரம்பிச்சுடுவார். 'ஸாரி சார், ப்ளீஸ் சார், நானே செஞ்சு கொடுத்துடறேன் சார்'ன்னு நாம் கெஞ்ச வேண்டியதாய்டும்,'' என்றாள் ஃப்ரீதா எட்வின்.

வந்தனாவுக்கு அலுவல் தொடர்பாக அரவிந்த் அறைக்குத் தினம் செல்ல வேண்டிய அவசியம் இல்லை. ஒன்றிரண்டு சந்தர்ப்பங்களில் செல்ல இருந்த போதெல்லாம் தேவைக்கு அதிகமாய் ஒரு வார்த்தையோ, ஒரு புன்னகையோ கூட வெளிப்படுத்தாத அவனின் கண்ணியம் மதிக்க வைத்தது. நிறையக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று எண்ண வைத்தது.

செக்ஷன் ஹெட் ஒலித்த இண்டர்காமில் பேசிவிட்டு, ''வந்தனா, உங்களை எம். டி. கூப்பிடறார்'' என்றதும் கூட்டிக் கொண்டிருந்த லெட்ஜரை அடையாளக் காகிதம் வைத்து மூடிவிட்டு, நாற்காலியைப் பின்தள்ளி எழுந்தாள். புடைவையின் ஃப்ளீட்ஸ் புரள நடந்தாள்.

போனில், ''டைம் வாங்க வேணாம் சார். எப்ப இருந்தாலும் ஆஜராகித்தான் ஆகணும். அஞ்சாம் தேதி ஊர்லதான் இருக்கேன். அன்னைக்கு கோர்ட் விசாரணைல கலந்துக்க ரெடி. தள்ளிப் போடாம தயாராய்டுங்க,'' என்று பேசிக் கொண்டிருந்த அரவிந்த் கண்களால் வந்தனாவை வரவேற்றுவிட்டு, ''சரி, அப்படியே செஞ்சிடுங்க,'' என்று வைத்தான்.

''வந்தனா, உட்காருங்க.''

''பரவாயில்லை சார்.''

''ஜாய்ன் பண்ணி ஒரு மாசமாச்சு, இல்லையா?''

''நாளையோட ஒரு மாசம் சார்.''

''எப்படி ஃபீல் பண்றீங்க? வேலை பிடிச்சிருக்கா? ஆபீஸ் பிடிச்சிருக்கா?''

''ரொம்ப திருப்தியா இருக்கு சார்.''

''அட்டெண்டன்ஸ் ரெஜிஸ்தரைப் பார்த்தேன். ஒரு நிமிஷத்திலேர்ந்து பதினைஞ்சு நிமிஷம் வரைக்கும் தினம் லேட்டா வந்துட்டிருக்கீங்க. அதைக் கண்டிக்கிறதுக்காக உங்களைக் கூப்பிடலை. அதைச் சரி செஞ்சிடலாமேன்னுதான்...''

''ஸாரி சார்... சீக்கிரமாத்தான் புறப்பட

பட்டுக்கோட்டை பிரபாகர்

றேன். பஸ் கரெக்ட் டயத்துக்குக் கிடைக்க மாட்டேங்குது. டிராஃபிக் ஜாம், அது, இதுன்னு எப்படியாச்சும் லேட் ஆய்டுது. ஐ ஃபீல் வெரி ஸாரி. இனிமே அப்படியா காம கண்டிப்பாய்ப் பார்த்துக்கிறேன். இன் னும் முன்னாடியே புறப்பட்டுடறேன்.''

நிமிர்ந்து அவள் முகத்தைப் பார்த்தான் அரவிந்த். அதில் லேசான அவமானமும், குற்ற உணர்ச்சியும் எழுந்தன.

''வந்தனா, ஹர்ட் ஆயிடாதீங்க. உங்க ளுக்கு ஒரு யோசனை சொல்லத்தான் கூப் பிட்டேன். நம்ம ஆபீஸ்ல வண்டி வாங்கிக்கக் குறைஞ்ச வட்டியிலே லோன் வசதி உண்டு. மாசா மாசம் சம்பளத்திலே பிடிச்சுக்கு வாங்க. ஒரு மொபெட் வாங்கிக்கங்களேன். ஈஸி டு ட்ரைவ். இது ஒரு சுயநலம் கலந்த சலுகைன்னு வச்சுக்கங்களேன். அக்க வுண்டண்ட்கிட்டே அப்ளிகேஷன் இருக்கு. வாங்கி எழுதிக் கொடுங்க, சாங்ஷன் பண் றேன்.''

வந்தனா உற்சாகம் மேலிட, ''தேங்க் யூ வெரி மச் சார்!'' என்றாள். புன்னகை முகத் துடன் வெளியேறினாள். ஒரு மொபெட் எவ்வளவு செளகரியம்! அவரவர் தேவை களை உணர்ந்து செயல்பட இவரால் எப்படி முடிகிறது? இது அலுவலகமா இல்லை, குடும்பமா?

அரவிந்த் தன் அறையில் ஸ்டாண்டில் மாட்டியிருந்த கோட் எடுத்து அணிந்து கொண்டு, ப்ரீஃப்கேஸில் வீட்டிற்கு எடுத்துச் சென்று பார்க்க நினைத்த சில ஃபைல்களை எடுத்து வைத்துப் புறப்பட எத்தனித்த அதே தினத்தின் மாலையில்...

''எக்ஸ்க்யூஸ் மி சார்!'' என்று உள்ளே வந்தாள் வந்தனா.

''வாங்க... என்ன மேடம்?''

அவன் முகம் பார்க்காமல் மேஜை மேல் குண்டூசிக் கிண்ணத்தைப் பார்த்துக் கொண்டு சொன்னாள், ''சார், அந்த லோன் அப்ளிகேஷனை நான் கொடுக் கலை.''

''சரி. அது உங்க இஷ்டம். வாய்ப்பு இருக்குன்னு சொன்னேன். பயன்படுத்திக் கிறதும், பயன்படுத்திக்காததும் உங்க விருப் பம். ஆனா... ஏன் வேணாம்?''

''இந்த ஆபீஸ்ல ஒரு வருஷம் சர்வீஸ் முடிச்சதுக்கப்புறம்தான் அந்தச் சலுகை கிடைக்கும்ங்கிற விதி இருக்கு. அப்படித் தான் சில பேர் வாங்கியிருக்காங்க.''

''யெஸ். அந்த விதி எனக்குத் தெரியாதா? கான்ஸ்ட்டிடியூஷனையே மாத்தறாங்க. இது கம்பெனி ரூல்தானே? நான் ஏற்படுத்தியது தானே? அதுக்காகவா தயங்கினீங்க? நாளைக் குக் கொடுங்க. ஒரு ஸ்பெஷல் கேசா நான் ஏற்பாடு பண்றேன்.''

''இதைத்தான் சொல்வீங்கன்னு எனக் குத் தெரியும் சார். ஆனா... வந்து... எனக் காக எனக்கு மட்டும் இந்த விசேஷச் சலுகை — அதுவும் விதியை மீறி?''

''ஏன்னா, ஒரு வண்டி உங்களுக்கு அத்தி யாவசியமாத் தேவைப் படுது.''





## சிறைக்குள் தேடி வந்த வெற்றி!

**ப**ஞ்சாபில் ஐ. பி. எஸ். அதிகாரியாக இருந்தவர் சிம்ரஞ்சத்சிங்மான். அரசியல் காரணங்களுக்காகப் பதவியை ராஜினாமா செய்தார். பொற்கோவிலில் நடந்த 'புளு ஸ்டார்' நடவடிக்கையின் போது, இவர் தீவிரவாதிகளுக்கு உதவினார் என்று குற்றம் சுமத்திச் சிறையிலடைத்தனர். லோங்கோவால் ஒப்பந்தம் செய்து கொண்ட போது, பிந்தரன்வாலே கோஷ்டியினர் அகாலிதளத்தை இரண்டாக உடைத்தனர். ஐக்கிய அகாலிதளம் என்று உருவாக்கினர். அக் கட்சி, அப்போது சிறையிலிருந்த இவரையே தலைவராகத் தேர்ந்தெடுத்தது. இந்திரா கொலை வழக்கு தொடர்பாக விசாரணை செய்ய ஆனந்தராம் என்ற சி. பி. ஐ. அதிகாரியை ராஜீவ் நியமித்தார். அவர் இந்திரா கொலை வழக்கில் மானுக்கும் தொடர்புண்டு என்று அறிக்கை சமர்ப்பித்தார். எனவே, மான் தொடர்ந்து சிறையிலேயே இருந்தார். இப்போது தேர்தலில் வெற்றி பெற்றதால் இவரை ராஜீவே விடுதலை செய்து வழக்கையும் வாபஸ் பெறச் சொல்லி விட்டார்!

## 'இளம் துருக்கியர்' என்று அழைக்கப்பட்டவர்!

**ச**ந்திரசேகர் உ. பி. காரர். நேரு காலத்திலேயே எம்.பி. பதவி வகித்தவர். துணிச்சலாக ஆளும் கட்சியின் குறைகளை விமர்சனம் செய்தவர்களில் சந்திரசேகர், கிருஷ்ணகாந்த், மோகன்தாரியா ஆகிய மூவரும் முக்கியமானவர்கள் என்பதால் நேரு காலத்திலேயே இம் மூவரையும் 'இளம் துருக்கியர்கள்' என்று செல்லமாக அழைப்பார்கள். எமர்ஜென்ஸியின் போது காங்கிரஸிலிருந்து வெளியேறினார் சந்திரசேகர். ஜெயப்பிரகாஷ் நாராயணின் நம்பிக்கைக்குரியவராகத் திகழ்ந்தார். ஜனதா கட்சியின் தலைவர் பதவியில் இருந்தவர் என்றாலும் ஆட்சியைப் பொறுத்தவரை எம். பி. பதவிக்கு மேல் வேறு பதவியை வகித்தறியாதவர்.



''நான் சொல்லலையே அப்படி?''

''நான் அப்படி உணர்ந்தேன்.''

''மன்னிக்கணும் சார். மத்தவங்களுக்கில்லாத ஒரு விசேஷச் சலுகை எனக்குக் காட்டப்படறதை நான் விரும்பலை. ஒரு வருஷம் கழிச்சே நான் அப்ளை பண்றேன். தயவு செஞ்சி நான் உங்க வார்த்தையை மறுத்துட்டதா நினைக்காதீங்க. எனக்கு அது பிடிக்கலை. அவ்வளவுதான்.''

அரவிந்த் பார்வையை விலக்காமல். அவள் முகத்தைச் சில விநாடிகள் பார்க்க, அவள் தன் விழிகளைத் தாழ்த்திக் கொள்ள வேண்டியதாயிருந்தது.

'அசட்டுப் பெண்ணே, நீ எனக்கு எவ்வளவு தூரம் விசேஷமானவள் என்பதை உணராமல் தன்மானம் பேசுகிறாயோ?'

''வெல். நான் யாரையும், எதிலயும் வற்புறுத்தறதே இல்லை,'' என்று தன் ப்ரீஃப்கேஸைக் கையில் எடுத்துக் கொண்டான் அரவிந்த்.

''**இ**ன்சல்ட்! எ க்ரேட் இன்சல்ட்! இதைவிட உன்னை அவமானப்படுத்த முடியாது அரவிந்த்!'' என்றான் கிருஷ்ணன் அரவிந்த் வீட்டுப் பால்கனியில் தொங்கிய மூங்கில் கூடையில் அமர்ந்து, லேசாக அசைந்தபடி.

சற்றுத் தள்ளி நாற்காலியில் கைலியும், ஜிப்பாவுமாக அமர்ந்து நியூஸ் பேப்பர் புரட்டிக் கொண்டிருந்த அரவிந்த், ''எந்த வகையில?'' என்றான்.

''நீ யாரு? பாஸ். அவ யாரு? உன்கிட்டே சம்பளம் வாங்கற ஸ்டாஃப்! லோன் வாங்கிக்கன்னு நீயே சொன்னப்புறம் என்ன பிரஸ்டீஜ் வேண்டிக் கிடக்கு. அதென்ன சட்டம் பேசறது?''

''அவ பிரஸ்டீஜ் பார்க்கலைடா. அதுக்கு வேற பேரு.''

''ஆமாம். அலட்சியம்னு சொல்லலாம்.''

''இல்லை, தன்மானம்! அநாவசியமா ஒரு சலுகையடைய விரும்பாத அந்த மேன்மையான குணத்தைக் கொச்சைப்படுத்தாதே, கிருஷ். இந்த ஒரு மாசத்தில இந்த ஒண்ணுதான் உன்கிட்டே நான் சொன்ன சம்பவம். இதுமாதிரி இன்னும் நாலஞ்சு நடந்திருக்கு. ஒவ்வொண்ணுலயும் அவமேல நான் வளர்த்துக்கிட்ட மதிப்பும், அன்பும் விஸ்வரூபம் எடுத்துக்கிட்டே போகுது.''

''ஆரம்பிச்சிட்டியா?'' என்று கிருஷ் சிகரெட் பற்ற வைத்துக் கொண்டு தீக்குச்சியை விரல் சுடும்வரை பிடித்து, பிறகு வாயால் ஊதியணைத்து எறிந்தான்.

''கிருஷ். இந்த ஒரு மாச நெருக்கத்துல அவளும் என்னைப் பத்தி நேரடியாவும், மறைமுகமாகவும் கிடைச்ச தகவல்களை வச்சி, ஓரளவு புரிஞ்சிக்கிட்டிருப்பா. இப்போ நான் தாராளமா என் மனசைத் திறக்கலாம்னு நினைக்கிறேன். நீ என்ன

# இன்றுமுதல் ஆறே 6 வாரங்களில்

# க்ளியர்·டோன்

## க்ரீம் உமக்கு மெருகேற்றும் சிகப்பழகு·

முதல் வாரம்



மூன்றே நாட்களில் என்
சருமத்துக்கு அதிக மென்மை!

2ம் வாரம்



மாசுமரு எல்லாம் மறையுது.
அப்பாடா!

3ம் வாரம்



பாருங்க! இப்ப என்
முழங்கைகள் மழமழ.

4ம் வாரம்



"ஒளிவீசுதே உன்னோட
மேனியழகு" என்றாள் என் சிநேகிதி.

5ம் வாரம்



வெய்யிலிலே கூட என்
உடம்பு கறுக்கலே. பத்திரமா!

6ம் வாரம்



இப்போது நான் ஒரு
க்ளியர்-டோன் ரசிகை!

க்ளியர்-டோனில் உள்ள ஒப்பற்ற ஃபார்முலா உங்கள் சருமத்தை ஒளிநிறக்க வைக்கிறது. சிகப்பழகு பொலிய அதோடு மட்டுமல்ல. க்ளியர்-டோனில் உள்ள தனிச் சிறப்புப் பொருள் ஒன்று, அலங்கோல மாசுமருக்களை அகற்றுகிறது. க்ரீமில் உள்ள மாயிஸ்ச்சரைஸர் தனதன ஈரவளமூட்டி உங்கள் மேனியழகுக்கு கவனிக்கத்தக்க மென்மை ஒளிமெருகூட்டுகிறது — விருக்கென ஆறே 6 வாரங்களில்!
விடாமல் அன்றாடம் இரு தடவைகள் க்ளியர்-டோன் இட்டு வந்தீரானால் அழகுவண்ண விளைவுகளை — வெய்யில், நிழல் எதனிலும் — நிலைநிறுத்திக் கொள்ள அதுவே உதவும்.




**க்ளியர்·டோன்**

லண்டன் • பாரிஸ் • நியூயார்க்

நினைக்கிறே?''

''அது இப்ப அவசியமில்லை. சொன்னா லும் உனக்குப் பிடிக்காது. நான் அபிப்பி ராயம் சொல்ற — அறிவுரை சொல்ற ஸ்டேஜ் எல்லாம் தாண்டி ரொம்ப தூரம் வந்தாச்சு. ப்ளூ ப்ரிண்ட் முடிஞ்சு, அப்ரூ வல் வாங்கி, அஸ்திவாரம் போட்டாச்சு. இப்ப மனையைப் பத்தி நான் பேசினா அது அபத்தம். என்னை விடு. உனக்கு வந்தனா வேணும். உன் மனைவியாகணும் அவ. அதில நீ ரொம்பத் தீர்மானமா இருக்கேதானே?''

''ரொம்ப.''

''உன்னை மறுத்தா, அவதான் முட் டாள்! அதுக்கு வாய்ப்பே இல்லை. அவ சண்டி மாடுதான், நொண்டி மாடு இல்லை. அடுத்த கட்டத்தில இறங்கிடு. நான் ஏதாச் சும் தூது போகணுமா, சொல்லு, செய் யறேன்.''

''இல்லை. நானே அவகிட்டே பேச லாம்னு இருக்கேன்.''

''பேசு. பெஸ்ட் ஆஃப் லக்,'' என்று சிகரெட்டைக் கைமாற்றிக் கொண்டு நீட்டி, குலுக்கினான் கிருஷ்ணன்.

பேனாவை மூடிக் கைப்பைக்குள் வைத்துக் கொண்டு, வந்தனா எழுந்தாள். அலு வலகம் முக்கால்வாசி காலியாகியிருந்தது.

''புறப்பட்டுட்டீங்களாம்மா, எம். டி. உங்களைக் கூப்பிட்டார்,'' என்றான் ப்யூன்.

வந்தனா அனுமதி பெற்று அறைக்குள் வந்த போது, அரவிந்த் விரல்களுக்கிடையில் பென்சிலை அசைத்துக் கொண்டே, ''ப்ளீஸ்...'' என்று எதிரே நாற்காலியைக் காட்டினான். இரண்டு முறை அவன் வற்பு றுத்தியதும் வந்தனா அமர்ந்தாள்.

''வந்தனா, நீங்க அவசரமா வீட்டுக்குப் போக வேண்டியிருக்கா? ஒரு பத்து நிமி ஷம் லேட்டாப் புறப்படலாமா?''

''பரவாயில்லை சார். சொல்லுங்க, என்ன விஷயம்?''

''ஆபீஸ் மேட்டர் இல்லை இது. பர்சனல். எனக்குச் சுத்தி வளைச்சுப் பேசத் தெரி யாது. ஆனா இது, கடகடன்னு கொட்டிடற விஷயமும் இல்லை. ரொம்ப யோசிச்சு, எனக்குள்ளேயே பல தடவை அலசிப் பார்த்து, மனசுக்குள்ளே நூறு தடவை ஒத்திகை பார்த்தும்... இப்ப சடார்னு சொல்ல வரமாட்டேங்குது.''

வந்தனா அமைதியாக இருந்தாள்.

அரவிந்த் அவளை ஒரு தரம் பார்த்து விட்டு, பேப்பர் வெயிட்டை மெதுவாக உருட்டிக் கொண்டே, ''வந்தனா, நான் உங்களை மனப்பூர்வமா நேசிக்கிறேன்னு சொன்னால் உங்களுக்கு அதிர்ச்சியா இருக் குமா?'' என்றான்.

(தொடரும்)



* மருதமலை உள்ள வரை...



* கலங்காமல் கடமையில்...



* ஜார்ஜ் ஸ்டைல்



* ரொம்பக் கவலை!

*** கே. ஆர். பவானி, கும்பகோணம்.**

**? மருதமலை மாமணியே முருகையா பாடியவரைப் பற்றி...?**

! அற்புதமான சாரீர வளம், சுருதி சுத்தம், அபாரமான இசை ஞானம். இன்னும் கொஞ்சம் ரசிகர்களை அனுசரித்துப் பாடியிருந்தால் கொடிகட்டிப் பறந்திருப்பார். இப்போது மட்டுமென்ன குறைந்தா போய் விட்டது? மருதமலையும், முருகனும் உள்ள வரை மதுரை சோமுவின் இசை நம் செவிகளில் ஒலித்துக் கொண்டிருக்கும்.

*** சு. ரேணுகா தேவி, ஈரோடு.**

**? முப்தி முகமது சையது அவர்களின் மகள் காஷ்மீர் கலகக்காரர்களால் கடத்தப் பட்டது பற்றி?**

! ரொம்ப ரொம்ப வேதனை தரும் விஷயம். புதிய அமைச்சரவை பதவிக்கு வந்திருக்கும் போது, அதுவும் பல்வேறு பிரச்னைகளை அமைதியான முறையில் பேச்சு வார்த்தைகள் மூலம் தீர்த்து வைக்கத் தாங்கள் தயாராக இருப்பதை வன்மையாக அவர்கள் உணர்த்தியிருக்கும் போது இப்படி அவசரப் பட்டு கா. வி. மு. நடந்து கொண்டிருக்கவே வேண்டாம். இதனால் மனக்கசப்பும், வன்மமும் வளர்ந்து, பிரச்னைகள் சுமுகமான நல்ல தீர்வு காண்பதைக் கடினமாக்குவதுதான் நிகர லாபமாய் இருக்கும். மகள் கலகக் காரர்களால் கைப்பற்றப்பட்டிருக்கும் போதும் மனம் கலங்காமல் தமது கடமைகளை நிறைவேற்றி வந்த உள்துறை அமைச்சருக்கு ஜே! அவர் மகள் நலமாகத் திரும்பி வர நம் பிரார்த்தனை நிறைவேறி விட்டது.

*** எம். தணிகை வேலன், ஆற்காடு.**

**? ராஜீவ் இல்லாத ம. வி. — சிறு குறிப்பு வரைக.**

! உண்மையைச் சொல்வதென்றால் 'டல்' அடிக்கிறது. தூர்தர்ஷன் நடுநிலையாகச் செயல்படுவது எனில் எல்லாவற்றையும் இருட்டடிப்புச் செய்வதல்ல. எல்லாக் கட்சியினருக்கும் தேவையான அளவு முக்கியத்துவம் தந்து நடந்து கொள்வதுதான். பல்வேறு தலைவர்களையும் அவர்களது நடவடிக்கைகளையும் உடனுக்குடன் மக்கள் காண வழி செய்ய வேண்டும்.

*** கே. வி. எஸ். மணியன், குடியாத்தம்.**

**? ராஜீவ் மீண்டும் பிரதமராக வேண்டி அன்பரக பக்திப் பயணம் சென்றிருக்கிறாரே?**

! செல்வியைக் கும்பிட்டும் பயனில்லை. பாதிக் கிணறு தாண்டியதாகி விட்டது. முருகனைக் கும்பிட்டுப் பார்க்கலாம் என்றுதான்.

*** டி. தாமைபிரபு, குடியாத்தம்.**

**? சபரிமலைக்குப் போகிறவர்களைச் சாமி என்று அழைப்பது ஏன்?**

! மாலை போட்டுக் கொண்டவர்கள், தங்கள் உள்ளத்தில் ஐயப்பனைக் குடியேற்றி விடுவதால் அவர்களைக் காணும் அனைவருக்கும் அவரே சாமியாகி விடுகிறார். அப்புறம் எல்லாச் சாமிகளும் ஏற்றத் தாழ்வின்றி ஒரே மாதிரி ஆகிவிடுகின்றனர். இது தாத்பரியம். ஆனால் இந்த நாளில் சில சாமிகள், வெறும் ஆசாமிகளாகவே இருக்கின்றனர். உடை மாறினால் போதாது. உள்ளம் மாற வேண்டும் என்று அந்தச் சிலருக்குப் பிற சாமிகள்தான் அன்புடன் எடுத்துரைக்க வேண்டும்.

*** ஜோராணி, தஞ்சாவூர்.**

**? தம்மைத் தாமே பாதுகாவலரிடம் அறி**



* அரசியலுக்கு முழுக்கு

## பாக்யராஜ் அரசியலுக்கு முழுக்குப் போட்டு விட்டாரே?

* கேபினட் மந்திரி   * திறமையானரிடம் சிறு குறை





## நீங்கள் கேட்டவை — தராசு





* கண்டிப்பு அரசு   * கண்ணாமூச்சி

முகப்படுத்திக் கொண்டு தமது அலுவலகத்துக்குள் முதல் நாள் நுழைந்த ஜார்ஜ் ஸ்டைல் பற்றி...?

! ஃபெர்னாண்டஸின் ஆணவம் இல்லாத, ஜபர்தஸ்து காட்டாத அந்தப் பாணி வரவேற்கத்தக்கது. இதனை, அதிகாரிகள் தம்மை எதிர்கொண்டு அழைத்துப் போக வேண்டும் என்று எதிர்பார்த்த தபால் — தந்தி — டெலிஃபோன் துறை அமைச்சர் உன்னி கிருஷ்ணனின் நடத்தையுடன் ஒப்பிட்டுப் பார்த்து வருந்தத்தான் வேண்டியிருக்கிறது. எதிர்கொண்டு அழைத்தவர்களில் ஒருவராக ஸாம் பிட்ரோடா காத்து நிற்கவில்லையாம். அமைச்சருக்கு மூக்குக்கு மேல் கோபம்! ஸாம் வருத்தம் தெரிவித்த பிறகும் அது அடங்கவில்லை! திறமையானர்களிடம் உள்ள சிறு குறைகளைப் பெரிது படுத்திக் கொண்டு போனால் நாடு உருப்படாது.

* மு. மதிவாணன், அரூர்.

? பாக்யராஜ் அரசியலுக்கு முழுக்குப் போட்டு விட்டாரே?

! ஜானகி அம்மாள் மாதிரி முழுசாக ஒதுங்கிக் கொண்டு தாம் உண்டு படப்பிடிப்பு உண்டு என்று இருந்தால், 'சீச்சீ! இந்தப் பழம் புளிக்கும்' என்று ஒதுங்கிப் போய் விட்ட நரிபோல் இவரும் புத்திசாலி. மாறாகக் கொக்கியில் சிக்கி இழுபட்டுத் தலைவியின் காலடியில் போய் விழுந்து துவண்டு துள்ளினால் வேறு பலரைப் போல் இவரும் கருவாடுதான்!

* ஏ. உமாசங்கர், குடியாத்தம். *

? தமிழக அமைச்சரவையில் இலாகா மாற்றங்கள் செய்ய நாடாளுமன்றத் தேர்தல் காரணமாக அமைந்துவிட்டதே?

! ஒரு தோல்வி ஏற்பட்டால் அதற்கான காரணங்களை ஆராய்ந்து தன்னைத் திருத்திக் கொள்ளாதவன் முட்டாள் ஆகிறான். அந்த அளவில் அமைச்சரவையில் தேர்தல் தோல்விகள் அலசப்பட்டதும் காரணங்கள் ஆராயப்பட்டதும் வரவேற்கப்பட வேண்டியவை. தேர்தல் சமயத்தில் அத்தியாவசியப் பொருள்களுக்கு இருந்த பற்றாக்குறை எதிர்க்கட்சியினருக்கு வன்மையான ஆயுதமாகப் பயன்பட்டது உண்மை. மத்திய அரசு செய்த ஓர வஞ்சனை ஒருபுறமிருந்தாலும் அதற்கான தார்மிகப் பொறுப்பைச் சம்பந்தப்பட்ட அமைச்சர் ஏற்றே ஆக வேண்டும். இலாகா மாற்றம் என்பது சிறிய தண்டனை. ராஜினாமா கோருவது பெரிய தண்டனை. முதல்வர் சிறுதண்டனை தந்திருக்கிறார். அதைத் தொடர்ந்து நடந்த ராஜினாமா நாடகமும் கண்ணாமூச்சி விளையாட்டும் தேவையற்றவை.

* வசந்தா காந்த், கருப்பம்புலம்.

? தேர்தலில் ஓர் இடம் கூடப் பிடிக்காத தி. மு. க. வுக்குக் கேபினட் மந்திரி! இந்த அக்கிரமத்தை எங்கே போய்ச் சொல்வது?

! மைனாரிடியான ஜனதா தளம் தேசிய முன்னணி என்ற கூட்டணிக்கு அமைச்சரவையில் இடம் தருவதை ஒருவாறு புரிந்து கொள்ளலாம். பதிலுக்குத் தமிழக அமைச்சரவையில் ஜனதா தளத்துக்கு இடம் தர வேண்டும் என்ற கோரிக்கைதான் புரிந்து கொள்ள முடியாத அக்கிரமமாக இருக்கிறது! அதுசரி, மாறனுக்கு அங்கே அமைச்சர் பதவி தந்துவிட்டு, இலங்கைப் பிரச்னையைக் கலைஞர் தலையில் கட்டி அனுப்பிவிட்ட பிரதமரின் சாமர்த்தியத்தைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்!

* ஆர். மாதவராமன், சோளிங்கர்.

? வி. பி. சிங் அமைச்சரவையில் உங்களுக்கு மிகவும் பிடித்த விஷயம் எது?

! 'இந்த அரசு கண்டிப்புடன் நடந்து கொள்ளும்' என்று நிதி அமைச்சர் தண்டவதே அறிவித்ததுதான். சிக்கனத்தைக் கடைப்பிடிப்பதிலும், பொருளாதாரச் சட்டங்களை அமுல்படுத்துவதிலும், லஞ்ச ஊழலை அகற்றுவதிலும், பணம் விரயமாகாமல் தடுப்பதிலும் தண்டவதே கண்டிப்புக் காட்டி வெற்றி கண்டால் சுபிட்சம் நம்மக்கள் முன் கைகட்டி நிற்கும்.

* பாக்யமுத்து, திருச்சி.

? யாரை நினைத்தால் கவலையாக இருக்கிறது?

! 'ஜெ'யின் நன்மதிப்பில் இன்று உயர்ந்துள்ள இராதாவை எண்ணினால் ரொம்ப ரொம்பக் கவலையாகத்தான் இருக்கிறது. எப்போது கீழே போட்டு உடைக்கப் போகிறாரோ!

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

ஏ. உமாசங்கர்,<br>
1, அண்ணா நகர்,<br>
பிச்சனூர் பேட்டை,<br>
முருகன் டாக்கீஸ் பக்கம்,<br>
குடியாத்தம் — 632 601.

வெற்றி நடை போடுகிறது!

ஆல்பர்ட் A/c
6 காட்சிகள்

சந்திரன் A/c
அபிராமி A/c
பாரத்
3 காட்சிகள்
மற்றும்
நகரெங்கும்

சாந்தனு சினி கம்பைன்ஸ்



# ஆராரோ ஆரிரரோ

UA

கதை.திரைக்கதை.வசனம்
இசை.டைரக்ஷன்
**K.பாக்யராஜ்**

தயாரிப்பு
**பூர்ணிமா பாக்யராஜ்**





K. ராஜப்ரீத A.P. மணிவண்ணன் C.ராமலிங்கம் ELEGANT

# சினி சிப்ஸ்

* கலக்ஷணா





* பானுப்ரியா



* அஞ்சு



* மனோ — சித்ரா.

● 'உதிரிப் பூக்கள்' படத்தில் பேபியாக நடித்து ஓர் அசத்து அசத்திய அஞ்சு, இப்போது 'கதாநாயகியாக'த் திரையில் வலது கால் எடுத்து வைத்துள்ளார். 'முந்தானை சபதம்' படத்தில் யோகராஜுக்கு ஜோடி. 'தாங்க முடியாத வறுமைச் சூழ்நிலையின் காரணமாக மீண்டும் சினிமாவுக்கு வந்துள்ளேன்' என்கிறார், வித்தியோதயாவில் ஒன்பதாம் வகுப்பு படித்து வருகின்ற அஞ்சு! சென்ற ஆண்டு கேரளாவில் 'ருக்குமணி' என்ற படத்தில் நடித்ததற்குச் 'சிறந்த நடிகை அவார்டு' வாங்கிய அஞ்சுவுக்கு நிஜ வாழ்க்கையிலும் சரி, சினிமாவிலும் சரி, 'காமெடி ரோல்' பண்ணுவதில்தான் அதிக விருப்பமாம்.

● தமிழ்ப்படத்தில் நடிக்க வேண்டும் என்று ரொம்ப ஆசையாய் இருந்ததாம் நடிகை பானுப்ரியாவுக்கு. வாய்ப்புக் கிடைக்காமல் தள்ளிப் போய்க் கொண்டே இருந்ததாம். திடீரென்று பாக்யராஜிடமிருந்து 'ஆராரோ ஆரிரரோ' படத்தில் நடிக்க அழைப்பு வந்ததும் எட்டுத் தெலுங்குப் படங்களைத் தியாகம் செய்துவிட்டு ஓடோடி வந்துவிட்டாராம்! 'தமிழ் சினிமா' அவரின் தியாகத்தை மெச்சி அவருக்குத் தாலாட்டுப் பாடுமா? இல்லை 'பெப்பே...' சொல்லுமா?

● கலக்ஷணா நிறைய வருத்தப்படுகிறார். என்ன காரணம்? சத்யராஜ், பிரபு போன்றவர்களுடன் ஜோடியாக நடித்த தம்மை இப்போது அவர்களுடன், 'அம்மா'வாக நடிக்கக் கூப்பிடுகிறார்களே என்றுதான்! என்ன செய்ய? அதுதானே சினிமாங்கிறது! அதே கலக்ஷணா இன்னொரு விஷயத்திற்காக நிறையச் சந்தோஷப்படுகிறார். சிறுவனான தம் பையனுக்கு மாமனார் எம். எஸ். விஸ்வநாதன் இப்போதே சங்கீதம் கற்றுக் கொடுக்க ஆரம்பித்துவிட்டாரே என்றுதான்! நெற்றி நிறையத் திருநீறும் குங்குமமும் அணிந்து தாத்தாவும் பேரனும் தரையில் ஆர்மோனியப் பெட்டியுடன் உட்கார்ந்திருக்கும் காட்சியைப் பார்க்கும் போதெல்லாம்... 'யப்பா, நிச்சயம் எதிர்காலத்தில் என் மகன் பெரிய இசையமைப்பாளன்தான்' என்று பெருமிதமாக இருக்கிறதாம்!

● பல் நீண்டு முன்னந்தலை நரைத்து முகம் உப்பி... மைனர் செயின் டாலடிக்க 'இந்திரன் சந்திரனில்' மேயராக வருகின்ற கமலுக்கு.. எஸ். பி. பி. குரல் மாற்றி ஒரு தினுசாகப் பாடினாராம். விளைவு? குரல் ரிப்பேராகி விட்டதாம்! ஒரு வாரம் ரிகார்டிங் போக முடியாமல் செம அவஸ்தைப்பட்டிருக்கிறார், எஸ். பி. பாலசுப்பிரமணியம்.

● இதுவரை பிரபுவுக்குக் கால்ஷீட் பார்த்துக் கொண்டிருந்த சிவாஜிகணேசனின் அண்ணன் சண்முகத்தின் மகன் மனோ, 'பொண்ணு பார்க்கப் போறேன்' படத்தின் மூலம் ஹீரோவாக அறிமுகமாகியுள்ளார். கதாநாயகனான நேரமோ, என்னவோ, சிவாஜி குடும்பத்திலிருந்து பிரிந்து, தனிக் குடித்தனம் போக வேண்டிய சூழ்நிலை வந்துவிட்டதாம். இருந்தாலும், பரஸ்பரம் உறவு நெருக்கமாகத்தான் இருக்கிறது என்கிறார், மனோ!

— எஸ். பாலு.



# வழிகாட்ட ராஜாஜி வாழ்கிறார்!

●● "ராஜாஜி என்னைவிடக் குறைந்த பட்சம் ஆறு மாதங்களாவது முன்னோக்கிப் பார்க்கின்ற ஆற்றல் உடையவர்!"

— காந்திஜி.

●● வேதாரண்யம் உப்புச் சத்தியாக்கிரகத்தின் போது, கலெக்டர் தார்ன் துரை சத்தியாக்கிரகிகள் யாருக்கும் வழியில் யாருமே உபசாரம் செய்யக் கூடாது என்று தடைவிதித்திருந்தார். ஆனால் தடையை மீறி வழிநெடுக சத்தியாக்கிரகிகள் மக்களுடைய விருந்தோம்பலைப் பெற்றனர். ஓர் ஊரில் தடபுடலான விருந்து. பாயசம் பரிமாறப்பட்டது. சத்தியாக்கிரகிகளில் ஒருவர் ருசித்துச் சாப்பிட்டுவிட்டு, "இன்னொரு தடவை கேட்கலாமே" என்று ஆசையை அடக்க முடியாமல் சொல்லிவிட்டார். சிரிப்புக்கிடையே மறுமுறை பாயஸம் பரிமாறப்பட்டது. விருந்து முடிந்த பின் ராஜாஜி அந்தச் சத்தியாக்கிரகியைத் தனியே அழைத்து, "உன்னால் மறுமுறை பாயஸம் சாப்பிடும் ஆசையைக் கூட அடக்க முடியவில்லை என்றால், நாட்டுக்காகத் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறாய் என்று எப்படி ஏற்பது? நீ திரும்பிப் போய்விடு" என்று கூறி அனுப்பிவிட்டார்.

●● காந்திஜியின் காரியதரிசி மகாதேவ தேசாயிடம் ஒரு சமயம் ராஜாஜியின் புதல்வர் ஸி. ஆர். நரசிம்மன் பின்வருமாறு குறிப்பிட்டார்: "காந்திஜி ராமன் என்றால் ராஜாஜி அநுமன் மாதிரி!"

"அப்படிச் சொல்வது அவ்வளவு சரியல்ல" என்றார் மகாதேவ தேசாய். "காந்திஜி ராமன் என்றால் அவருக்கு நான்தான் அநுமன் மாதிரி. ராஜாஜியோ லக்ஷ்மணன் போன்றவர்!"

— தூர்தர்ஷனுக்காக எஸ். ஸம்பத்குமார் தயாரித்த ராஜாஜி வரலாறு வீடியோ படத்திலிருந்து.

●● "வயது முதிர்ந்த காலத்தில் ராஜாஜி கென்னடியைச் சந்திக்க அமெரிக்கா சென்ற போது, நான் லண்டனில் இந்தியத் தூதராக இருந்தேன். வழியில் என்னுடன் அவர் தங்கிய நாட்களில் அவருடைய பேச்சிலிருந்து நான் பல புதிய விஷயங்களைத் தெரிந்து கொண்டேன். ஆனால் இது எனக்கு அதிசயம் அளிக்கவில்லை. அந்த மூதறிஞர் அவருக்குத் தெரியாத சில விஷயங்களைப் பற்றி என்னைக் கேள்விகள் கேட்டுத் துளைத்துத் தெரிந்து கொள்ள முயன்றதுதான் எனக்கு வியப்பளித்தது! 'மேதை என்று பெயர் பெற்றிருந்த போதிலும் அவர் மேலும் மேலும் அறிவைப் பெருக்கிக் கொள்வதில் எவ்வளவு கவனமாக இருக்கிறார்' என்று அதிசயித்துப் போனேன்!"

— எம். ஸி. சக்லா.

●● "ஒரு சமயம் ஜப்பானிய நூலிழைகள் இறக்குமதியில் அதிகாரிகளின் அறிவுரையை மீறி ராஜாஜி செயல்பட்டதில் வம்பில் மாட்டிக் கொண்டார்! நாடாளுமன்றத்தில் கேள்வி வந்துவிட்டது. அதிகாரிகளாகிய நாங்கள், அதற்குப் பதில் தயாரிக்கும் போது, எங்கள் அறிவுரை மீறப்பட்டது என்பதைச் சொல்லாமலும், துணைக் கேள்விகள் எழ வாய்ப்பில்லாத முறையிலும் ஒரு பதிலைத் தயாரித்து ராஜாஜியிடம் சமர்ப்பித்தோம். வேறு ஓர் அமைச்சராக இருந்தால் எங்கள் சாமர்த்தியத்தைப் பாராட்டியிருப்பார். ஆனால் ராஜாஜி அந்தப் பதிலை அடித்துவிட்டு, மார்ஜினில், 'இந்த பதில் சரியில்லை; இதில் உண்மையும் இல்லை. தவறு நேர்ந்ததற்குப் பொறுப்பு ஏற்க வேண்டியவன் நான்; அதில் பின்வாங்க மாட்டேன்' என்று எழுதினார்! பிறகு வேறு பதிலைத் தாமே தயாரித்து நாடாளுமன்றத்தில் சமர்ப்பித்தார். சத்தியத்திலும் நாடாளுமன்றத்தினிடமும் அவ்வளவு மதிப்பு வைத்திருந்தார், ராஜாஜி."

— எம். பி. பாய், ஓய்வு பெற்ற ஐ.ஸி.எஸ். அதிகாரி.

●● "நான் ஜனாதிபதியான பிறகு என்னைப் பண்படுத்திய நிகழ்ச்சிகளில் மிகவும் முக்கியமானது ராஜாஜியின் சந்திப்பு."

— ஜான் எஃப். கென்னடி.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.



NEW
HI-FOAM
SUPER
BIZ
multipurpose
cleaning powder
NET WT. 2.5 kg




REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka